ஆராலுமகண்டிங் கருட்குருவாய் நீயொருகால்
வாராயோவந்து வருத்தமெல்லாந் தீராயோ
பூராயமாகவருட் பூரணத்தி லண்டமுதற்
பாராதிவைத்த பதியே பராபரமே. (௨)

வாழாதுவாழவுனை வந்தடைந்தோ ரெல்லாரு
மாழாழியென்ன வருளாறாழுககாறன்றே
டேழாயெனவுலக மேசுமினிநானொருவன்
பாழாகாவாறுமுகம் பாரநீபராபரமே, (௩)

உள்ளத்திலுள்ளே யொளித்தென்னையாட்டுகின்ற
களளகருணையையான காணுந்தரமாமோ
வெள்ளதைமாற்றி விடகதுணைபார்நஞ்சூட்டும்
பாளதினமின்போற பதைத்தேனபராபரமே. [௪]

வாவிககமலமலர் வண்டாய்த்துவண்டுதுவண்
டாவிகதுணிவுறவுனககன்புவைசகதாககஞ்சலெனபாய்
பூவிறகும்வான்கடைபிற புல்விறபோரபோலவொன்றைப்
பாவிககமாட்டேன் பதியேபராபரமே (௫)

விண்ணாறுவெற்பின் விழுந்தாங்கெனமார்பிற்
கண்ணாறுபாயசசிடுமென காதலவெள்ளங்கண்டிலையோ
தண்ணாறுசாந்தபதத் தற்பரமேநால்வேதப்
பண்ணாறுமின்பப் பதியேபராபரமே. (௬)

கூடியநின்சீரடியார கூட்டமென்றேவாய்க்குமென
வாடியவென்னெஞ்சமுக வாட்டமுநீகண்டிலையோ
தேடியநின்சீரருளைத் திக்கனைத்துங்கைகுவித்து
பாடியநான்கண்டாய் பதியேபராபரமே. (௭)

நெஞ்சத்தினூடே நினைவாய்நினைவூடி
மஞ்சலெனவாழுமென தாவித்துணைநீயே
சஞ்சலமாற்றினையினிமேற றுயககுபசாரம்புகன்று
பஞ்சரிக்கநானோ பதியேபராபரமே. (௮)

புத்திநெறியாகவுனைப் போற்றிப்பலகாலு
முத்திநெறிவேண்டாத மூடனேனாகெடுவேன்
சித்திநெறிக்கென்கடவேன சீரடியார்க்கேவல்செய்யும்
பத்திநெறிக்கேனுமுகம் பார்நீபராமரமே. (௯)

கண்டறியேன்கேட டறியேன் காட்டுநினையேயிதயங்
கொண்டறியேன்முத்தி குறிக்குந்தாமுமுண்டோ
தொண்டறியாப்பேதைமையேன சொலலேனினியொன்மைஎல்லாம்
பண்டறிவாய்நீயே பகராய்பராபரமே. (௰)

திடமுறவே-முற்றுப்பெற்றது-ஆடு௬அ.



## தன்வினை

கொச்சகக்கலிப்பா.

தன்னையறியத்தனதருளாற் றானுணர்ந்து
மன்னைப்பொருளெனவே வாழாமறபாழ்நெஞ்சே
பொன்னைப்புவியைமடப் பூவையரைமெய்யெனவே
யென்னைக்கவர்ந்திழுத்திட் டெனைபலன்கண்டாயே. (க)

தன்னை-முற்றுப்பெற்றது-ஆ-டுசுசு

## ஆக்குவை

ஆக்குவைமாயையாவு நொடியினிலதனைமாள
நீக்குவைநீக்கமிலலா நினைப்பொடுமறப்புமாற்றிய
போக்கொடுவரமின்றிப் புனிதநல்லருளானந்தம
தாக்கவுஞ்செய்வாயன்றோ சச்சிதானந்தவாழ்வே. (க)

ஆக்குவை-முற்றுப்பெற்றது-ஆ-டுளஎ

---

## கற்புறுசிந்தை

கற்புறுசிந்தைமாதர் கணவரையன்றிவேறோ
ரிற்புரத்தவரைநாடார் யாங்களுமின்பவாழவுந்
தற்பொறியாகநல்குந் தலைவநின்னலதோர்தெய்வம
பொற்புறக்கருதோங்கண்டாய் பூரணானந்தவாழ்வே. (க)

முருந்திளநகையார்பார முலைமுகந்தழுவிச்செவ்வாய
விருந்தமிர்தெனவருந்தி வெறியாடடுககளாய்நாளு
மிருந்தலோகாயுதப்பே ரினத்தனையிருந்தவேழை
பொருந்தவுங்கதிமேலுண்டோ பூரணானந்தவாழவே (உ)

தீதெலாமொன்றும்வன்மை செறிந்திருட்படலம்போர்த்த
பாதகசிந்தைபெறற பதகனுன்பாதநீழ
லாதரவடையவுள்ளன் பருள்கிலையாயின்மற்றியார்
போதனைசெய்யவலலார் பூரணானந்தவாழ்வே. (ங)

நாதனைநாதாதீத நண்பனைநடுவாய்நின்ற
நீதனைககலந்துநிற்க நெஞ்சமேநீவாவென்றால்
வாதனைபெருககியென்னை வசஞ்செய்துமனந்துன்மார்க்க
போதனைசெய்தனன்றோ பூரணானந்தவாழ்வே (ச)

எண்ணியவெண்ணமெல்லா மிறப்புமேற்பிறப்புக்காசை
பண்ணியென்னறிவையெல்லாம் பாழாககியெனைப்பாழாக்குந்
திண்ணியவினையைக்கொன்று சிறியனையுய்யக்கொண்டார்
புண்ணியவினககேயன்றோ பூரணானந்தவாழ்வே (ரு)

பதிநீபத்திக்கான பலனுநீபலவாச்சொல்லுஞ்
சித்திநீசித்தர்சித்தி திறமுநீதிறமார்மோன
முத்திநீமுத்திக்கான முதலுநீமுதன்மையான
புத்திநீயெனக்கொன்றுண்டோபூரணானந்தவாழ்வே
தாயினுமினியநின்னைச சரணனவடைந்தநாயேன்
பேயினுங்கடையனாகிப் பிதற்றுதல்செய்தனன்றோ
தீயிடைமெழுகாய்நொந்தேன் றெளிவிலேன்வினை
போயினதாற்றகிலேன்பூரணானந்தவாழ்வே[காலம்

கற்புறுசிந்தை-முற்றுப்பெற்றது-ஆகூ-௱ளஎ



## மலைவளர்காதலி

பதியுண்டுநிதியுண்டு புத்திரர்கண்மித்திரர்கள்
பக்கமுண்டெக்காலமும்
பவுசுண்டுதவிசுண்டு திட்டாந்தமாகயம
படரொருந திமிரமணுகாக
கதியுண்டுஞானமாங் கதிருண்டுசதுருண்டு
காயசித்திகளு முண்டு
கறையுண்டகண்டர்பா லமமைநின்றனிற்
கருத்தொன்று முண்டாகுமே
நதியுண்டகடலெனச சமயத்தையுண்டபர
ஞானவானந்த வொளியே
நாதாந்தரூபமே வேதாந்தமோனமே
நானென்றுமகந்தை தீர்த்தேன்
மதியுண்டமதியான மதிவதனவல்லியே
மதுசூதனன றங்கையே
வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே. (க)

தெட்டிலேவலியமட மாதர்வாய்வெட்டிலே
சிற்றிடையிலே நடையிலே
சேலொத்தவிழியிலே பாலொத்தமொழியிலே
சிறுபிறைநுதற்கீற்றிலே
பொட்டிலேயவர்கட்டு பட்டிலேபுனைகந்த
பொடியிலே யடியிலேமேற்
பூரித்தமுலையிலே நிறமிளறுமிலையிலே
புந்திதனை நுழையவிட்டு
நெட்டிலேயலையாம லறிவிலேபொறையிலே
நின்னடியா கூட்டத்திலே

நிலைபெற்றவன்பிலே மலைவற்றமெய்ஞ்ஞான
ஞேயத்திலே யுனிருதாண்
மட்டிலேமனதுசெல நினதருளுமருளவையோ
வளமருவு தேவையரசே
வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர்காதலிப் பெண்ணுமையே. (௨)

பூதமுதலாகவே நாதபரியந்தமும
பொய்யென் றெனைககாட்டியெஞ்
போதத்தினடுலாகி யடியீறுமிலலாத
போதபூரண வெளிககு
ளேதுமறநிலலெனறுபாயமாவைத்துநினை
வெலலாஞசெய வலலசித்தா
மின்பவுருவைத்தந்த வன்னையேநின்னையே
யெளியேன் மறந்துயவனோ
வேதமுதலானநல் லாகமததனமையை
விளக்குமுட்கண்ணிலாககு
மிககநின்மகிமையைக கேளாதசெவிடர்ககும்
வீறுவாதம புகலும்வாயு
வாதநோயாளர்ககு மெடடாதமுககணுடை
மாமருந் துக்கமிதமே
வரைராஜனுககிருகண் மணியாயுதிததமலை
வளாகாதலிப பெண்ணுமையே (௩)

மிடியிட்டவாழ்கையா லுப்பிட்டகலமெனவு
மெயயெலா முள்ளுடைநது
வீறிட்டசெல்வாதந் தலைவாயிலவாசமாய
வேதனைகளுறவேதனுந்
துடியிட்டவெவ்வினையை யேவிஞானபாவிநான
றுடரிட்டதொழில்களெலலாந
துணடிட்டசாண்கும்பி யினபொருடடாயதுனை
தொண்டர்பணி செய்வதெனறோ
வடியிட்டசெந்தமிழி னருமையிடடாருரி
லரிவையோர் பரவைவாயி
லம்மட்டுமடியிட்டு நடைநடந்தருளடிக
ளடியீது முடியீதென
வடியிடடமறைபேசு பச்சிளங்கிள்ளையே
வளமருவு தேவையரசே

வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர்காதலிப் பெண்ணுமையே (ச)

பூரணிபுராதனி சுமங்கலைசுதந்தரி
புராந்தகி திரியம்பகியெழிற
புங்கவிவிளங்குசிவ சங்கரிசகஸ்ரதள
புஷ்பமிசை வீற்றிருக்கு
நாரணிமனாதீத நாயகிகுணாதீத
நாதாந்த சத்தியெனறுன்
னாமமேயுச்சரித் திடுமடியர்நாமமே
நானுச்சரிக்கவசமோ
வாரணிசடைக்கடவு ளாரணியெனப்புகழு
வகிலாண்ட கோடியீன்ற
வன்னையேபின்னையுங் கன்னியெனமறைபேசு
மானந்த ரூபமயிலே
வாரணியுமிருகொங்கை மாதர்மகிழ்கங்கைபுகழ்
வளர்மருவுதேவையரசே
வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே (ரு)

பாகமோபெறவுனைப் பாடவறியேன்மலப்
பரிபாகம் வரவுமனதிற
பண்புமோசற்றுமிலை நியமமோசெய்திடப்
பாவியேன் பாபரூப
தேகமோதிடமிலலை ஞானமோகனவிலுஞ்
சிந்தியேன் பேரின்பமோ
சேரவென்றாற்களவு மனதுமோமெத்தவுஞ்
சிந்திக்கு தென்செய்குவேன்
மோகமோமதமோ குரோதமோலோபமோ
முற்றுமாச் சரியமோதான்
முறியிடடெனைக்கொள்ளு நிதியமோதேடவெனின்
மூசுவரி வண்டுபோல்
மாகமோடவுமவல்லனெனையாளவல்லையோ
வளமருவு தேவையரசே
வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர்காதலிப் பெண்ணுமையே (சு)

தூளேறுதூசிபோல் வினையேறுமெய்யெனுந்
தொகதிறுடசிக்கிநாளுஞ்

சுழலேறுகாற்றினிடை யழலேறுபஞ்செனச
சூறையிட் டறிவையெல்லா
நாளேறநாளேற வார்த்திகமெனுங்கூற்றி
னட்பேற வுள்ளுடைந்து
நயனங்களற்றதோ ரூரேதுபோலவே
கானிலந் தனிலலையவோ
வேளேறுதந்தியைக கனதந்தியுடன்வென்று
விறையேறு மாலைசூடி
விண்ணேருமேகங்கள வெந்பேறிமறைவுற
வெடடிய கருங்கூந்தலாய
வாளேறுகண்ணியே விடையேறுமெம்பிரான்
மனதுக் கிசைந்தமயிலே
வரைராஜனுககிருண் மணியாயுதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே (எ)

பூதமொடுபழகிவள ரிந்திரியமாமபேய்கள்
புந்திமுத லானபேயகள்
போராடுகோபாதி ராக்ஷசப்பேய்களென்
போததனை யூடழித்து
வாதனைவளாதநிடச சதுரவேதவஞ்சன்
வுதித்தானி வல்லவெலலாம்
வீழும்படிக்குனது மௌனமந்த்ராதிக்ய
விதனையை வியந்தருள்வையோ
நாதவடிவாகிய மகாமந்த்ரரூபியே
நாதாநத வெட்டவெளியே
நறசமயமானபயிர் தழையவருமேகமே
ஞானவானந்தமயிலே
வாதமிடுபரசமயம யாவுக்குமுணர்வரிய
மகிமைபெறு பெரியபொருளே.
வரைராஜனுககிருகண் மணியாயுதித்தமலை
வளர்காதலிபபெணுமையே. (அ)

மலைவளர்காதலி-முற்றுப்பெற்றது-ஆக-௫அ௫

# அகிலாண்டநயாகி சந்தவிருத்தம்.

வட்டமிட்டடொளிர் பிராணவாயுவெனு
நிகளமோடுகம னனுசெயு
மனவெனுமபெரிய மத்தயானையையென்
வசமடக்கிடின்மு மண்டலத்

திடமுற்றவள ராஜயோகமிவன்
யோகமென்றறிஞர் புகழவே
யேழையேனுலகி னீடுவாழவனினி
யிங்கிதற்குமநு மானமேர்
பட்டவர்த்தனர் பராவுசகரதா
பாசயமான சுபயோகமும்
பாரகாவிய கவிதவநான்மறை
பராயணஞ்செய் மதியூகமு
மட்டசித்தியுந லம்பருககருள
விருதுகட்டியபொ னன்னமே
யண்டகோடிபுகழ் காவைவாழுமகி
லாண்டநாயகியெனமமைமயே (க)

அகிலாண்டநாயகி-சந்தவிருத்தம்-முற்றுப்பெற்றது-ஆகூடு௱அசு

## பெரியநாயகி-விருத்தம்

காற்றைப்பிடித்து மட்கரகத்தடைத்தபடி
கனமப் புனற்குளூறுங்
கடைகெட்டநவவாயில பெற்றபசுமட்கலக
காயத்து ளெனையிருத்திச
சோற்றைசசுமத்திநீ பந்தித்துவைககத்
துருத்திகருண் மதுவென்னவே
துள்ளித்துடித்தென்ன பேறுபெற்றேனருட்
டோயநீ பாய்சசல்செய்து
நாற்றைப்பதித்தென ஞானமாம்பயிரதனை
நாட்டிப் புலப்பட்டியு
நமனைதீப்பூடு மனுகாமன்முன்னின்று
நாடுசிவபோகமான
பேறறைப்பகுத்தருளி யெனையாளவல்லேயோ
பெரியவகி லாண்டகோடி
பெறறநாயகிபெரிய கயிலைமாநகர்மருவு
பெரியநாயகி யம்மையே (க)

பெரியநாயகி-விருத்தம்-முற்றுப்பெற்றது-ஆகூடு௱அஎ.

## தநதைதாய்.

தந்தைதாய்மகவுமனை வாழ்க்கையாக்கை
சகமனைத்துமெளனியருடைமைத்தபோதே
யிந்திரசாலங்கனவு கானனீரா
யிருந்தது வேயிவ்வியற்கை யென்னேயென்னே (க)

என்னைநான் கொடுக்கவொருப்பட்டகால
மியாதிருந்தென் னெவைபோயென் னென்னைநீங்கா
வன்னைபோலருள்பொழியுங் கருணைவாரி
யானந்தப்பெருமுகிலே யரசேசொல்லாய் (உ)

அரசேநின்றிருக்கருணை யல்லாதொன்றை
யறியாதசிறியேனைதினென் முத்திக்
கரைசேரும்படிக்குனருட் புனையைக்கூட்டுங்
கைப்பிடியேகடைப்பிடியாக் கருத்துட்கொண்டேன் (ங)

கண்டேனிங்கென்னையுமென் றனையுநீங்காக்
கருணையுநின் றன்னையுநான் கண்டேன்கண்டேன்
விண்டேனென்றெனைப்புறம்யாத் தள்ளவேண்டாம்
விண்டதுநின் னருட்களிப்பின்வியப்பாலன்றே (ச)

ஓவென்றசுத்தவெளி யொன்றேநின்றிங்
குயிரையெல்லாம்வம்மினெனவுவட்டாவின்பத்
தேவென்றநீகலந்து கலந்துமுத்தி
சேர்த்தனையேற் குறைவாமோசெகவிலாசம் (ரு)

செகத்தையெல்லா மணுவளவுஞ் சிதறுவண்ணஞ்
சேர்த்தணுவில் வைப்பையணுத்திரளையெல்லா
மகத்துவமாம்பிரமாண்டமாகசெய்யும்
வல்லவாநீநினைந்த வாறேயெல்லாம் (சு)

சொல்லாலே வாய்துடிப்பதல்லாநெஞ்சந்
துடித்திருகணீரருவிசொரியத்தேம்பிக்
கலலாலேயிருந்தநெஞ்சுங் கல்லான்முக்கட்
கனியேநெக்குருகிடவுங்காண்பேன்கொல்லோ (எ)

தந்தைதாய்-முற்றுப்பெற்றது-ஆக-ருகச



# பெறறவட்கே

பெறறவட்கே தெரியுமந்தவருத்தம்பிள்ளை
பெறும்பேதை யறிவாளோபேரானந்த
முற்றவர்க்கே கண்ணீர்கம் பலையுண்டாகு
முறாதவரே கன்னெஞ்சமுடையராவார் (க)

ஆவாவென்றழுதுதொழுங் கையராகி
யப்பனே யானந்த வடிகளேநீ
வாவாவென் றவர்க்கருளுங்கருணையெந்தாய்
வன்னெஞ்சர்க் கிரங்குவதெவவாறுநீயே (உ)

நீயேயிங் கெளியேற்குந் தாகமோக
நினைவூடே நின்றுணர்த்தி நிகழ்த்தலாலே

பேயேற்குந் தனக்கெனவோரன்புமுண்டோ
பெம்மானே யினனமன்பு பெருகப்பாராய் (௧)

பாராயோவென்றுயா மெல்லாமைய
பகருமுன்னே தெரியாதோர் பாவியேன்முன்
வாராயோ வின்னமொரு காலானுலு
மலர்க்காலென் சென்னிமிசை வைத்திடாயோ. (௨)

வைத்திங்காலைப் பிடிதநுக்கண்ணின் மார்பில்
வைத்தணைத்துக கொண்டு கையால்வளைத்துக்கட்டிச
சித்தமிசைபபுக விருத்திப்பிடித்துக்கொண்டு
தியககமற வினபசுகஞ சேர்வதனறோ. ௩

சேராமற சிறறினதைப் பிரித்தெந்நாளுந்
திருவடிப்பே ரினததுடனேசேராவண்ண
மாராக நானலேந்தே னரசேநீதா
னறிந்திருந்து மாயைபிலே ளழுந்தவைததாய் ௪

வைத்தபொருளுடலாவி மூன்றுநின்கை
வசமெனவே யானகொடுக்க வாங்கிககொண்டு
சித்தமிசைப் புகுந்ததுதான் மெயயோபொயயோ
சிறியேற்கிங் குளவுரையாய திகையாவண்ணம் ௫

திகையாதோ வெந்நாளும் பேரானந்தத்
தெள்ளமுக முதவாமற நிவலேகாட்டி
வகையாக வலககழிததா யுணடுடுதது
வாழந்தேனு னிரணடுதான மாடுபோலே ௬

மாடுமக்கள் சிற்றிடையார் சேமபொருளை
வைத்தகன தனமேடை மாடகூடம
விடுமெனபாற் றேடர்சசியோர் விடைவிடாமன்
பிக்ககதிவி டனறோ விளங்கலவேண்டும். ௭

விளங்கவெனக்குளளே விளங்காநின்ற
வேதகமே போதகமே விமலவாழவே
களங்கரகி தப்பொருளே யென்னை நீங்காக
கண்ணுதலே நாதாந்தக் காடசிப்பேறே ௮

நாதமேநாதாந்த வெளியேசுத்த
ஞாதுருவே ஞானமே ஞேயமேநல
வேதமே வேதமுடி வானமோன
வித்தேயிங் கென்னையினி விட்டிடாதே. ௯

பெற்றவட்கே-முற்றுப்பெ றறது ஆகூ-௬௱௬

# கல்லாலின்.

---

கல்லாலினீழறனி லொருநால்வர்க்குங்
கடவுணியுணர்த்துவதுங் கைகாட்டென்றாற்
சொல்லாலே சொலப்படுமோ சொல்லுந்தன்மை
அரும்புபறறிக கடல்கடக்குக் துணிபேயன்றே க

அன்றேவாமோ வெனவுஞ் சமயகோடி
யத்தனையும்வெவ்வேறா யாறறநேரே
நின்றேயே நினைபபெறுமா றெங்வாறுஙகே
நின்னருள்கொண் டறிவதல்லானெறிவேறுண்டோ. உ

நெறிபார்க்கி னின்னையறியகிலம்வேறே
நிலநிர்தீககால்வானுநீயலாத
குறியாது மிலலையென்றால் யாங்கள்வேறே
கோதையொருகூறுடையாய் கூறாய்கூறாய் ங

கூறாயவைம்பூதச சுமையைத்தாங்கிக்
குணமிலாமனமெனும் பேய்க்குரங்கின்பின்னே
மாறாதகவலையுடன் சுழலவெனனை
வைத்தனையேபரமேநின் மகிமைநன்றே ச

நன்றெனவுந்தீதெனவு மெனக்கிங்குண்டோ
நானாகிநீயிருந்த நியாயஞ்சற்றே
யின்றெனக்குவெளியானா லெல்லாம்வல்ல
விறைவாநின்னடியருட னிருந்துவாழ்வேன் ரு

வாழ்வெனவுந்தாழ்வெனவு மிரண்டாப்பேசும்
வையகததா கற்பனையாம் மயக்கமான
பாழ்வலையைக்கிழித்துதறிச செயலபோய்வாழப்
பரமேநினானந்தப் பார்வையெங்கே சா

எங்கேயெங் கேயருளென் றமையிரந்தா
னேழையிவனெனவுமென் யிசைகூறு
மங்கேயெங்கேயெளிவந் தென்னையாண்ட
வாரமுதேயுனைககாண்பா னலந்துபோனேன் எ

போனநாட் கிரங்குவதே தொழிலாவிங்ஙன்
யொருந்து நாளத்தனையும்போக்கினேனென்
ஞானநாயகனேநின் மோனஞான
நாட்டமுற்று வாழ்ந்திருக்கு நாளெந்நாளோ அ

நாட்பட்டகமலமென்ன விதயமேவு
நறுந்தேனேதுன்மார்க்க நாரிமார்கண்
வாட்பட்டகாயமிந்தக் காயமென்றே
வன்கூற்றுமுயிர்பிடிக்க வருமந்நீதி கூ

நீதியெங்கே மறையெங்கே மண்விண்ணெங்கே
நித்தியா மவர்களெங்கே நெறிதப்பாத
சாதியெங்கே யொழுக்கமெங்கே யாங்களெங்கே
தற்பரநீ பின்னுமொன்றைச சமைப்பாதானல். (௰)

ஆனாலும் யானெனதிங் கற்றவெல்லை
யதுபோது மதுகதிதா னல்லவென்று
போனாலுங யாண்போவ னல்லான் மோனப்
புண்ணியனே வேறுமொரு பொருளைநாடேன், (௰௧

பொருளேநின் பூரணமே விட்டகாலம்
போகருவா வுண்டோதற போதமுண்டோ
விருடானுண் டோவலலால் வெளிதானுண்டோ
வினபமுண்டோ துன்பமுண்டோ யாமஙகுண்டோ ௰௨

உண்டோநீ படைத்தவுயிர்த் திரளிலென்போ
லொருபாவி தேகாதி யுலகம்பொய்யாக
கண்டேயுமெள்ளவுத் துறவுமின்றிக்
காசுனிகரு ளலேந்தவரா காட்டாய்தேவே ௰௩

தேவரெல்லாந்தொழசசிவந்தசெந்தாண்முக்கட
செஙகரும்பேமொழிகருமொழிதிதிப்பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்குந்திருசசெவிக்கே
மூடனேனபுலம்பியசொன் முற்றுமோதான். ௰௪

முற்றுமோவெனக்கினியா னந்தவாழவு
மூதறிவுக்கினியாயநின் முளரித்தாளிற
பற்றுமோ சறறுமில்லே யையோவையோ
பாவிபடுங கடகலககம பார்தலிலாயோ. ௰௫

பார்த்தனவெல் லாமழியு மதனுறசுடடிப
பாராதே பார்த்திருககப ரமேமோனா
மூர்த்திவடிவாயுணர்த்துங் கைககாட்டுணமை
முற்றுயென தல்லலவினைமுடிவதெனறோ ௰௬

என்றுனைநீயனறுளம்யா மென்பதென்னே
விதுநிற்கவெலலந்தா மில்லையென்றே
பொனறிடசசெய் வல்லவனீயெமைபபடைக்கும்
பொற்புடையாயென்னினதுபொருந்திடாதே. ௰௭

பொருந்துசக மனைத்திணையும்பொய்பொய்யெனறு
புகனறபடிமெய்யென்றே போத நபத்
திருந்தபடியெனறிருப்ப தன்றோயன்றே
தெமபெருமான் யான்கவலை யொய்தாக்காலம். ௰௮

காலமே காலமொரு மூன்றுங்கட்டுங்
காரணமே காரணகாரியங்களில்லாக
கோலமேயென்னவாவாவென்றுகூவிக
குறைவறநின்னருள்கொடுத்தாற் குறைவோசொல்லாய்

சொல்லாய தகுதியெல்லாங்கடந்துநின்ற
சொரூபானந்தச்சுடரே தொண்டனேனை
கல்லாகப்படைத்தாலு மெத்தநன்றே
கரணமுட னுறவுகலக்கமாட்டேன் ௨௰

கலங்காதநெஞ்சுடைய ஞானதீரர்
கடவுளுனைக் காணவேகாயமாதி
புலங்காணா நானொருவன் ஞானம்பேசி
பொய்க்கூடு காத்ததென்னபுதுமைகண்டாய். ௨௧

கண்டிலையோ யான்படும்ப ாடெல்லாமூன்று
கண்ணிருந்துந்தெரியாதோ கசிந்துள்ளொன்பார
தொண்டாடித்தொண்டனென்றேகருணைநீங்காச
சுத்தபரிபூரணமாஞ்சோதிநாதா. ௨௨

சோதியாயிருட்பிழம்பைச சூறையாடுந்
தூவெளியேமெனைதொடர்து தொடர்நதெந்நாளும
வாதியாநினறவினைப்பகையையென்ற
வாழ்வேயிங்குனைப்பிரிந்து மயங்குகின்றேன். ௨௩

மயககுறுமென் மனமணுகாம்பதைகாட்டி
வலவினையைப்பறித்தனையே வாழ்வேநானென்
செயககடவேன்செயலெல்லாநினதேயென்று
செங்கைகுவிப் பேனல்லாற் செயல்வேறில்லை. ௨௪

வேறுபடுஞசமயமெல்லாம் புகுநதுபாாககின்
விளங்குபரம்பொருளேநின்விளையாடடல்லாள்
மாறுபடுங்கருததில்லைமுடிவின்மோன
வாரிதியினதிரளபோலவயங்கிறறம்மா ௨௫

அம்மாவிந்தி ததிசயந்தாணனறேவனறே
வகணடநிலை யாகநின்னைய றிவாமவண்ணஞ
சுமமாவேயிருக்கவைத்தையையாவாங்கே
சுகமயமாயிருபபதலலாற் சொலவானெனனே ௨௬

எனனேநானபிறந்துழலவந்தவாறிங்
கெனகெனாவோசெயலிலையேயேழையெனபான்
முன்செயவினையெனவும பினனேவந்து
[illegible] ௨௭

தாயான தண்ணருளை நிரம்பவைத்துத்
 தமியேனைப்புரவாமற் றள்ளித்தள்ளிப்
போயானதென்கொலையா வேகதேசம்
 பூரணத்துக்குண்டோதான் புகலல்வேண்டும் ௨அ

புகலரியநின்விளையாட் டென்னேயெந்தாய்
 புன்மையறிவுடையவென்னைப்பொருளாப்பண்ணி
யிகலவினைக்குமலமாலை கன்மத்தூடே
 யிடருறவுஞ்செய்தனையேயிரக்கமீதோ ௨௯

இரக்கமொடுபொறைநிறைய தலறிவாசார
 மிலலேனுனல்லோர்களிட்டங்கண்டாற்
கரககுமியல்புடையேனைபாழ் நெஞ்சமெந்தாய்
 கருந்தாதோவலவுருக்கோகரியகல்லோ (௩௰)

கலலாவின்-முற்றுப்பெற்றது-ஆ-௬௩௧

---

## பராபரக்கண்ணி

சீராருந்தெய்வத் திருவருளாம்பூமிமுதற்
 பாராதியாண்ட பதியேபராபரமே

கண்ணாரக்கண்டோர் கருப்பொருள்காணமலருள்
 விண்ணூடிருந்தவினபவெற்பேபராபரமே ௨

சிந்தித்தவெல்லாமென சிநதையறிந்தியுதவ
 வந்தகருணை மழையேபராபரமே ௩

ஆராவமுதேயரசேயானந்தவெள்ளப்
 பேராறேமோனப் பெருக்கேபராபரமே ௪

ஆரறிவாரென்ன வனந்தமறையோலமிடும்
 பேரறிவேயின்பப் பெருக்கேபராபரமே ௫

உரையிறந்தவன்பருளத்தோங்கொளியாயோங்கிக்
 கரையிறந்தவின்பக்கடலேபராபரமே ௬

எத்திக்குத்தானுமி யென்னிதயத்தேயூறித்
 தித்திக்குமானந்தத் தேனேபராபரமே ௭

திக்கொடுகீழ்மேலுந் திருவருளாம்பொற்பறிந்தோர்
 கைக்குள்வளர்நெல்லிக்கனியேபராபரமே ௮

முத்தேபவளமேமொய்த்தபசும்பொற்சுடரே
 சித்தேயென்னுள்ளத்தெளிவேபராபரமே ௯

கண்ணேகருத்தேயென் கற்பகமேகண்ணிறைந்த
 விண்ணேயானந்த வியப்பேபராபரமே ௰

வாக்காயமனதாய்மனவாக்கிறந்தவாபாற்
 றாக்காதேதாக்குந் தனியேபராபரமே ௰௧

பார்த்தவிடமெல்லாம் பரவெளியாய்த்தோன்றவொரு
வார்த்தைசொல்லவந்த மன்றுவேபராபரமே. (௰௨)

வானந்தமண்ணினந்தம்வைத்துவைத்துப்பார்க்கவெனக்
கானந்தந்தந்த வரசேபராபரமே. (௰௩)

அன்பைப்பெருக்கியெனதாருயிரைக்காக்கவந்த
வின்பப்பெருக்கே யிறையேபராபரமே. (௰௪)

வானமெல்லாங்கொண்ட மௌனமணிப்பெட்டகத்துக்
கானபணியான வணியேபராபரமே. (௰௫)

ஓடுமிருநதியு மொன்றாகக்கண்டவர்க
ளாடும்பொருளான நட்பேபராபரமே. (௰௬)

சித்தநினைவுஞ் செயுஞ்செயலுநீயெனவா
மூததழுக்கூடகான வுறவேபராபரமே (௧௭)

போதாந்தப்புண்ணியர்கள் போற்றிஜயபோற்றியெனும்
வேதாந்தவீட்டில விளக்கேபராபரமே. (௧௮)

மூத்தாந்தவீதி முளரிதொழுமன்பருக்கே
சித்தாந்தவீதிவருந்தேவ பராபரமே. (௧௯)

ஈனந்தருமுடல மென்னதியானென்பதற
வானந்தம்வேண்டி யலைந்தேன்பராபரமே. (௨௰)

என்புருகிநெஞ்ச மிளகிக்கரைந்துகரைந்
தன்புருவாய்நிற்க வலந்தேன்பராபரமே. (௨௧)

சுத்தவறிவாச் சுகம்பொருந்தினல்லாலென்
சித்தந்தெளியாதென செய்வேனபராபரமே. (௨௨)

மாறுவனுபூதி வாக்கினல்லாலென் மயக்கந்
தேறுதெனசெய்வேன் சிவமேபராபரமே. (௨௩)

தாகமறிந்தின்பநிட்டை தாராதேலாகெடுவேன்
றேகம்விழுந்திடினென் செய்வேன்பராபரமே. (௨௪)

அப்பாவென்னையப்பிலவைப்பேயாற்றுகிலேங் போற்றியென்று
செபபுவதலலாலவேறென் செய்வேன்பராபரமே. (௨௫)

உற்றறியுமென்னறிவு முட்கருவிபோற்சவிமாண்
டற்[illegible]ன்பந்தங்கிலேயே வையாபராபரமே. (௨௬)

சொல்லாலடங்காச் சுகக்கடலில்வாய்மடுக்கி
னல்லாலென்றாகமறுமோபராபரமே. (௨௭)

பாராயோவென்னைமுகம் பார்த்தொருகாலென்கவலை
தீராயோவாய்திறந்து செப்பாயபராபரமே. (௨௮)

ஓயாதோவென்கவலை யுள்ளேயானந்தவெள்ளம்
பாயாதோவையா பகராயபராபரமே. (௨௯)

ஓகோவுனைப்பிரிந்தா ருளவுங்கனவிலுநினைவுந்
தாகோமெழுகோ பகராய்பராபரமே (௩௰)

கூர்த்தவறிவத்தனையுங்கொள்ளைகொடுத்துன்னருளைப்
பார்த்தவனென்னைமுகம் பார்நீபராபரமே ௩௧]

கடலமுதேதேனேயென்கண்ணேகவலைப்
படமுடியாதெனைமுகம் பார்நீ பராபரமே (௩௨)

உள்ளமறிவாயுழைப்பறிவாய் நானேழை
தள்ளிவிடினமெத்தத் தவிப்பேன பராபரமே ௩௩)

கன்றிறுக்குச்சேதாக்கனிந்திரங்கல்போலவெனக்
கென்றிரங்குவாய்கருணை யெந்தாய்பராபரமே ௩௪)

எண்ணாதவெண்ணமெலாமெண்ணியெண்ணியேழைநெஞ்சம்
புண்ணாகச்செய்ததினிப் போதும்பராபரமே (௩௫)

ஆழாததுரும்பெனவே யங்குமிங்குமுன்னடிமை
பாழிற்றிரிவதென்ன பாவம்பராபரமே ௩௬)

கற்றவறிவாலுனைநான் கண்டவன்போற்கூத்தாடிற்
குற்றமெனவறிநெஞ்சே கொதிக்கும்பராபரமே(௩௭)

ஐயோவுனைக்காண்பா னாசைகொண்டதத்தனையும்
பொய்யோவெளியாய்ப் புகலாய்பராபரமே (௩௮)

துன்பக்கண்ணீரிற் றுளைந்தேற்குனதானந்த
வின்பக்கண்ணீர்வருவ தெந்நாள்பராபரமே ௩௯)

வஞ்சனையும்பொய்யுமுள்ளே வைத்தழுக்காறுள்ள
நெஞ்சனுக்குமுண்டோ நெறிதான்பராபரமே (௪௰)

பாசம்போய்நின்றவர்போற் பாராட்டியானுமதில்
மோசம்போனேனென முறையோபராபரமே (௪௧]

நன்றறியேன்றீதறியே னானென்றுநின்றவனா
ரென்றறியேனானேழை யெனனேபராபரமே [௪௨]

இன்றுபுதிதன்றே யெளியேனபடுந்துயர
மொன்றுமறியாயோ வுரையாய்பராபரமே [௪௩)

எத்தனைதான்சன்மமெடுத் தெத்தனைநான்பட்டதுய
ரத்தனையுநீயறிந்த தன்றோபராபரமே [௪௪]

இந்தநாட்சற்று மிரங்கிலையேற்காலன்வரு
மந்தநாட்காக்கவல்லா ரார்காண்பராபரமே [௪௫]

உற்றுற்றுநாடியுளமருண்ட பாவியைநீ
சற்றிரங்கியாளத் தகாதோபராபரமே (௪௬)

எள்ளளவுமின்னைவிடவில்லா வெனைமயக்கிற்
றள்ளுதலாலென்னபலன் சாற்றாய்பராபரமே ௪௭)

பாடிப்படித்துலகிற்பாராட்டிநிற்பதற்கோ
தேடியெனையடிமை சேர்த்தாய்பராபரமே. (௪௮)

சொன்னத்தைச்சொல்வதல்லாற்சொல்லறவென்சொல்லுருகிக்
கென்னத்தைச்சொல்வே னெளியேன்பராபரமே (௪௯)

சொல்லும்பொருளுமற்றுச் சும்மாவிருப்பதற்கே
யல்லும்பகலுமெனக் காசைபராபரமே (௫௰)

நேசஙிருவிகற்பங்கிட்டையல்லா லுன்னடிமைச்
காசையுண்டோநீயறியா தன்றேபராபரமே (௫௧)

துச்சனெனவேண்டாமித் தொல்லுலகிலல்லல்கண்டா
லச்சமிகவுடையே னையாபராபரமே (௫௨)

கண்ணுவாரேனுமுனைக்கைகுவியாராயினந்த
மண்ணுவாாகட்டைமதியேன்பராபரமே (௫௩)

கொல்லாவிரதங் குவலயமெல்லாமோங்க
வெல்லார்க்குஞ்சொல்லுவதென் னிச்சைபராபரமே (௫௪)

எத்தாற்பிழைப்பேனோ வெந்தையேநின்னருட்கே
பித்தானேன்மெத்தவுநான் பேதைபராபரமே (௫௫)

வாயினாற்பேசா மௌனத்தைவைத்திருந்துந்
தாயிலார்போனான் றளர்ந்தேன்பராபரமே (௫௬)

அன்னையிலாசசேய்போ லலக்கணுற்றேன்கண்ணா
வென்னகத்திற்றாய்போ லிருக்கும்பராபரமே (௫௭)

உற்றுநினைக்கிற்றுயரமுள்ளுள்ளே செந்தீயாய்ப்
பற்றவெனக்கேதென்னைமுகம் பார்நீபராபரமே. (௫௮)

பொய்யனிவனென்றுமெள்ளப்போதிப்பார்சொற்கேட்டுக்
கைவிடவும்வேண்டாமென்கண்ணேபராபரமே (௫௯)

எண்ணமறிந்தேதயிளைப்பறிந்தே யேழையுய்யும்
வண்ணந்திருக்கருணை வையாய்பராபரமே. (௬௰)

காட்டாதே யென்னையொன்றி னாட்டியிதமகிதங்
காட்டாதேயெல்லாநீ கண்டாய்பராபரமே (௬௧)

உன்னைநினைந்துன்னிறைவி லுள்ளேயுலாவுமென்னை
யன்னைவயிற்றின்ன மடைக்காதேபராபரமே. (௬௨)

பாமுனக்கென்யெண்ணும் பழக்கமேமாறு
வரமெனக்குத்தந்தருளென் வாழ்வேபராபரமே. (௬௩)

வந்தித்துநின்னை மறவாக்கடனாகச்
சிந்திக்கநின்னருள் செய்யாய்பராபரமே (௬௪)

எவ்வுயிருமென்னுயிர்போலெண்ணியிரங்கவுநின்
றெய்வவருட்கருணை செய்யாய்பராபரமே (௬௫)

வெட்டவெளிப்பேதையன் யான் வேறுகபடொன்றறியேன்
சிட்டருடன்சேரவைந்த தெண்டன்பராபரமே (௬௬)

இரவுபகலற்றவிடத் தேகாந்தயோகம்
வரவுந்திருக்கருணை வைப்பாய்பராபரமே ௬௭

மால்காட்டிச்சிந்தை மயங்காமனின்றுனைக்
    கால்காட்டினாங்காதே கண்டாய்பராபரமே. (சுஅ)

எப்பொருளுநீயெனவே யெண்ணுநான்றோன்றாத
    வைப்பையறியா திலையாலையாய்பராபரமே. (சுகூ)

சும்மாவிருப்பதுவே சுட்டற்றபூரணமென்
    றெம்மாலறிதற் கெளிதோபராபரமே. (எய)

முன்னொடுபின்பக்க முடியடிகாப்பண்ணறநின்
    றன்னொடொளிர்பதென்றோ சாற்றாய்பராபரமே. (எக)

மைவ்வண்ணந்தீர்ந்த மௌனிசொன்னதெவ்வண்ண
    மவ்வண்ணநிட்டை யருளாய்பராபரமே. (எஉ)

வித்தன்றியாதும் விளைவதுண்டோநின்னருளாஞ்
    சித்தன்றியாங்களுண்டோ செப்பாய்பராபரமே. (எங)

ஆங்காரமற்றுன் னறிவாவன்பருக்கே
    தூங்காததூக்கமது தூக்கும்பராபரமே. (எச)

சிந்தையவிழ்ந்தவிழ்ந்து சின்மயமாநின்னடிக்கே
    வந்தவர்க்கேயின்பநிலை வாய்க்கும்பராபரமே. (எரு)

சொல்லடாவூமரைப்போற் சொல்லிறந்துநீயாகி
    னல்லாலெனக்குமுத்தி யாமோபராபரமே. (எசு)

பேச்சாகாமோனம் பிறவாமுளைத்தென்றற்
    காச்சாசுமேற்பயனுண் டாமோபராபரமே. (எஎ)

கெட்டியென்றுன்னன்பர் மலங்கெட்டயர்ந்தோர் பூரணமாந்
    தொட்டிலுக்குட்சேய்போற் றுயின்றார்பராபரமே. (எஅ)

காட்டவருளிருக்கக் காணுதிருண்மலத்து
    நாட்டாமெனக்குவர னன்றோபராபரமே. (எகூ)

எத்தன்மைக்குற்ற மியற்றிடினுந்தாய்பொறுக்கு
    மத்தன்மைநின்னருளு மன்றோபராபரமே. (அய)

எத்தனையோதேர்ந்தாலு மென்னுலேயின்பமுண்டோ
    சித்துருவேயின்பச் சிவமேபராபரமே. (அக)

மண்ணொடுவிண்காட்டி மறைந்துமறையாவருளைக்
    கண்ணொடுகண்ணாகவென்றுகாண்பேன்பராபரமே. (அஉ)

பஞ்சரித்துநின்னைப் பலநாளிரந்ததெல்லா
    மஞ்சலெனும்பொருட்டே யன்றோபராபரமே. (அங)

எங்கெங்கேபார்த்தாலு மெவ்வுயிர்க்குமவ்வுயிரா
    யங்கங்கிருப்பதுநீ யன்றோபராபரமே. (அச)

அனைத்துமாய்நின்றவே யான்வேறென்றெண்ணி
    நினைக்குமாறெங்கே நிகழ்த்தாய்பராபரமே. (அரு)

நின்போதத்தாலே நினைப்புமறப்புமென்று
    மென்போதமெங்கே யியம்பாய்பராபரமே. (அசு)

ஒன்றைநினைந்தொன்றைமறந் தோமெனமெல்லாநீ
யென்றறிந்தாலெங்கே யியங்குமபராபரமே [அ௭]

கொழுந்தில்வயிரமெனக் கோதறவுள்ளன்பி
லழுந்துமவர்க்கேசுகமுண் டாகும்பராபரமே (அஅ)

பற்றும்பயிர்க்குப் படர்கொழுந்துபோற்பாவம்
பெற்றவர்க்கேநின்னருடான பேறும்பராபரமே (அ௯)

யோகியர்க்கேஞான மொழுங்காம்போஎன்பான
ராகியரும்யோகமுன்னே சாரந்தோபராபரமே [௯0]

அல்லும்பகலுமறிவாகி நின்றவர்க்கே
சொலலுமபொருளுஞ் சுமைகாண்பராபரமே [௯௧]

எச்சிலென்றுபூவை யிகழ்ந்தோர்க்குனைப்போற்றப்
பச்சிலையுங்கிள்ளப் படுமோபராபரமே [௯௨]

அந்தகரணமடங்கத் துறப்பதுவே
யெந்தத்துறவினுநன் றெந்தாயபராபரமே [௯௩]

தன்னையறிந்தாற்றலைவன்மேற்பற்றலது
பின்னையொருபற்றுமுண்டோ பேசாயபராபரமே (௯௪

அன்பாற்கரைந்துகண்ணீ ராறுகண்டபுண்ணியருக்
குன்பால்வரவழிதா னுண்டேபராபரமே (௯௫]

தன்னையறிந்தருளே தாரகமாநிற்பதுவே
யுன்னையறிதற் குபாயம்பராபரமே [௯௬]

கற்றகலையாணிலைதான் காணுமோகாண்பதெல்லா
மற்றவித்தேவெளியாமன்றோபராபரமே [௯௭]

கண்மூடிக்கண்விழித்துக் காண்பதுண்டோநின்னருளாம்
விண்மூடினெல்லாம் வெளியாம்பராபரமே [௯அ]

நேரேநினதருளென் னெஞ்சைக்கவரினென்றும்
பாரேன்சுகமும்படைப்பேன்பராபரமே (௯௯]

வான்காணவேண்டின் மலைபேறலொக்குமுன்னை
நான்காணப்பார்வைசெய் நாட்டம்பராபரமே (௱)

வாதனைவிட்டென்றுவின் மன்னிலல்லால்வேறுமொரு
சாதனைதானுண்டோநீ சாற்றாய்பராபரமே [௱௧]

பாரகமும்விண்ணகமும் பற்றுகின்பதருட்
டாரத்தைப்பற்றியன்றோ சாற்றாய்பராபரமே (௱௨

விளக்குந்தகளியும் வேறென்றாநின்னைத்
துளக்கமறநீயென்று சொல்லாய்பராபரமே (௱௩

பாராதிகியாப் பார்த்த[illegible]
மாராயுஞ்சிவ்வுநி[illegible]பராபரமே (௱௪

பொய்யைப்பொய்யென்யறியும் போதத்துக்காதாவுன்
மெய்யருளன்றோ விளம்பாய்பராபரமே (௱௫

வருவான்வந்தேனெனல்போன் மன்னியழியுஞ்சகத்தைத்
தெரிவாதவில்லையென்ற திரம்பராபரமே (௱௬)

மாயாசகமில்லையேன் மற்றெனக்கோர்பற்றுமில்லை
நீயேநானென்றுவந்து நிற்பேன்பராபரமே (௱௭)

வாறுதிநீயெனவே வைத்தமறையென்னையுநீ
தானாகச்சொல்லாதே சாற்றும்பராபரமே (௱௮)

வெள்ளக்கருணைமத வேழவாநின்னருட்கென்
கள்ளக்கருத்தே கவளம்பராபரமே (௱௯)

வண்டாய்த்துவண்டு மௌனமலரணைமேற்
கொண்டாற்கோவின்பங் கொடுப்பாய்பராபரமே (௱௰)

மாயைமுதலாம்வினை நீமன்னுயிர்தேர்ந்
தாயுமறிவானது நீயன்றோபராபரமே (௱௰௧)

என்னறிவுமியானுமென தென்பதுவுமாமிவைக
ணின்னவையேயன்றோ நிகழ்த்தாய்பராபரமே (௱௰௨)

பாரறியாதண்டப் பரப்பறியாதுன்பெருமை
யாரறிவார்நானோ வறியேன்பராபரமே (௱௰௩)

அண்டமனைத்திலுமா யப்பாலுக்கப்பாலுப்
கொண்டநின்னையாரறிந்து கொள்வார்பராபரமே (௱௰௪)

ஒப்புயர்வொன்றின்றி யொளிபுகாமோனவட்டக்
கப்பனுக்காம்வான்பொருணீ கண்டாய்பராபரமே (௱௰௫)

என்போலெளியவரு மெங்கெங்கும்பார்த்தாலு
முன்போலவலியவரு முண்டோபராபரமே (௱௰௬)

பார்க்கினண்டபிண்டப் பரப்பனைத்துநின்செயலே
யார்க்குசெயலில்லையே யையாபராபரமே (௱௰௭)

ஒன்றேபலவே யுருவேயுருவேயே
யென்றேயழைப்பதுனை யென்றும்பராபரமே (௱௰௮)

செப்புவதெல்லாஞ் செபநான் சிந்திப்பதெல்லாநின்
னொப்பியானமென வோர்ந்தேன்பராபரமே (௱௰௯)

ஆரிருந்தென்னார்போயென் னாரமுதாநின்னருளின்
சீரிருந்தாலுய்வேன சிவமேபராபரமே (௱௨௰)

வஞ்சநமனவாதனைக்கும் வன்பிறவிவேதனைக்கு
மஞ்சியுனையடைந் தேனையாபராபரமே (௱௨௰௧)

எந்தப்படியுன் னிதயமிருந்ததெமக்
கந்தப்படிவருவ தன்றோபராபரமே (௱௨௰௨)

எந்தெந்தநாளுமெனைப் பிரியாதென்னுயிராய்ச்
சிந்தைகுடிகொண்டவவுட் டேலேபராபரமே (௱௨௰௩)

அஞ்சலஞ்சலென் றடிமைக் கப்போதைக்கப்போதே
நெஞ்சிலுணர்ந்து நினைவேபராபரமே (௱௨௰௪

என்னையுன்றன்கைக்களித்தார் யாவரென்னையான்கொடுத்துப்
பின்னையுன்றற்பெறறனலம்பேசேன்பராபரமே (கஉரு)

வாய்பேசாவூமையென வைக்கவென்றோநீமௌனத்
தாயாகாவந்தருளைத் தந்தாய்பராபரமே (கஉஎ)

தன்னைத்தந்தென்னைத் தடுத்தாண்டநின்கருணைக்
கென்னைக்கொண்டென்னபல னெந்தாய்பராபரமே (கஉஎ)

மார்க்கண்டர்க்காக மறலிபட்டபாட்டையுன்னிப்
பார்க்கினன்பர்கென்ன பயங்காண்பராபரமே (கஉஅ)

சுட்டியுணராமற் றுரியநிலையாய்வெளியில்
விட்டிநின்னையாரே வியம்பேன்பராபரமே (கஉகூ]

சூதொன்றுமின்றியெனைச கம்மாவிருக்கவைத்தாய
யிதொன்றும்போதாதோ வின்பமபராபரமே (௱௩௰)

வாயொன்றும்பேசாமௌனியாய்வந்தாண்ட
தேயொன்றும்போதாதோ வின்பம்பராபரமே (௱௩க)

என்றுமிருந்தப்படிக் கென்னையெனக்களித்த
தொன்றும்போதாதோ வுரையாய்பராபரமே (கஙஉ)

எண்டிசைகீழ்மேலான வெல்லாபெருவெளியாக்
கண்டவிடத்தென்னையுனை கண்டேன்பராபரமே(கஙங)

பித்தனையேதுமரியாப் பேதையெனையாண்டஉனக்
கெத்தனைதானறெண்ட னிடுவேன்பராபரமே [கஙச]

தாயார்கற்பத்தூடனமுந் தண்ணீருந்தருளு
நேயவுனையாரே நினையார்பராபரமே (கஙரு)

விரிந்தமனமொடுங்கும் வேளையினைகப்
பரந்தவருள்வாழி பதியேபராபரமே [கஙசா]

சிந்தனைபோய்நானெனல்போய்த் தேககவின்பமாமழையை
வந்துபொழிந்தனைநீ வாழிபராபரமே [கஙஎ]

தந்தேனேயோர்வசனந் தந்தபடிக்கின்பமுமாய்
வந்தேனேயெந்தனைநீ வாழிபராபரமே [கஙஅ]

மண்ணும்விண்ணும்வந்துவணங்காவோநின்னருளைக்
கண்ணுறவுட்கண்டவரைக கண்டசர்பராபரமே [கஙகூ]

என்றுங்கருணைபெற்ற வின்பத்தபோதனர்சொல்
சென்றசெனறகிக்கனைத்துஞ்சொல்லும்பராபரமே[கசம

ஆடுவதும்பாடுவது மானந்தமாகனின்னைத்
தேடுவதுனின்னடியார் செய்கைபராபரமே [கசக]

பொங்கியநின்றண்ணருளைப் புட்கலமாய்பெறறவர்கட்
கெங்கெழுந்தெனனுயிறி யம்பாபராபரமே [கசஉ]

பாலரொடுபேயர்பிததர் பான்மையென்னிற்பதுவே
சீலமிகுஞானியர்தஞ் செய்கைபராபரமே [கசங]

உண்டுடுத்துப்பூண்டிங் குலகத்தாரபோற்றிரியுந்
தொண்டர்விளையாட்டே சுகங்காண்பராபரமே (௨௪௪)

கங்குல்பகலற்றதிருக் காட்சியர்கள்கண்டவழி
யெங்குமொருவழியே யெந்தாய்பராபரமே (௨௪௫)

காயநிலையல்லவென்று காண்பாருநாங்குவரோ
தூயவருட்பற்றாத்தொடரவாராபராபரமே (௨௪௬)

அப்புமுப்பும்போன்ற வயிக்கியபரானந்தர்தமக்
கொப்புவமைசொல்லவும்வா யுண்டோபராபரமே (௨௪௭)

சித்தந்தெளிந்துசிவமானோரெல்லோர்க்குங்
கொத்தடிமையான குடிகாண்பராபரமே. (௨௪௮)

தம்முயிர்போலெவ்வுயிருந் தானென்றுதண்ணருள்கூர்
செம்மையருகேவலென்றுசெய்வேன்பராபரமே (௨௪௯)

விண்ணுக்குமவிண்ணாகி மேவுமுனக்கியான்பூசை
பண்ணவிருக்குமாறு பகராய்பராபரமே (௨௫௦)

நெஞ்சகமேகோயி னினைவேசுகந்தமன்பே
மஞ்சனநீர்பூசைகொள்ள வாராய்பராபரமே (௨௫௧)

கெட்டவழியாணவப்பேய் கீழாகமேலான
சிட்டருனைப்பூசை செய்வார்பராபரமே (௨௫௨)

கால்பிடித்துமூலக்கனலைமதிமண்டலத்தின்
மேலெழுப்பிறநேகம் விழுமோபராபரமே (௨௫௩)

பஞ்சசுத்திசெய்துநின்னைப் பாவித்துப்பூசைசெய்தால்
விஞ்சியஞானம் விளங்கும்பராபரமே (௨௫௪)

அன்பர்பணிசெய்யவெனையாளாக்கிவிட்டுவிட்டா
லின்பநிலைதானேவந் தெய்தும்பராபரமே (௨௫௫)

மூர்த்திதலந்தீர்த்த முறையாற்றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலசற்குருவும் வாய்க்கும்பராபரமே (௨௫௬)

விரும்புஞ்சரியைமுதன் மெய்ஞ்ஞானநான்கு
மரும்புமலர்காய்கனிபோ லன்றோபராபரமே (௨௫௭)

தானந்தவந்தருமஞ் சந்ததமுஞ்செய்வர்சிவ
ஞானந்தனையணைய நல்லோர்பராபரமே (௨௫௮)

சொன்னதைச்சொல்லித் துடிக்கின்றவாணவப்பேய்க்
கின்னல்வருவதெந்நா ளெந்தாய்பராபரமே (௨௫௯)

இன்றேவிருவினைவந் தேறியதுநானென்றே
வன்றேவிளைந்ததன்றேவாற்றேன்பராபரமே (௨௬௦)

எண்ணமுந்தானின்னவிட மில்லையென்றாலியான்
பண்ணும்வினையேது பகராய்பராபரமே (௨௬௧)

என்னையின்னதென்றறியா வேழைக்குமாகெடுவேன்
முன்னவினைகூடன் முறையோபராபரமே (௨௬௨)

அறியாநான்செய்வினையை யையாநீகூட்டின்
குறியேதெனக்குளவு கூறாய்பராபரமே (௱சுங)

என்னைக்கெடுக்க விசைந்தவிருவினைநோய்
தன்னைக்கெடுக்கத் தகாதோபராபரமே (கசுச)

வல்லமையேகாட்டுகின்ற மாமாயைநாணுருவ
னில்லையெனிலெங்கே யிருக்கும்பராபரமே (கசுரு)

முக்குணத்தாலெல்லா மூலக்கப்பிரகிருதிக்
கிக்குணத்தைநல்கியதாரெந்தாய்பராபரமே (கசுசு

ஆற்றப்படாதுன்ப மையமென்றாலென்மனது
தேற்றப்படாதினியென் செய்வேன்பராபரமே [கசுஎ]

பூராயமாய்மனதைப் போக்கறியாமலையோ
வாராயலந்தே னரசேபராபரமே (கசுஅ)

சினமிறக்கக்கற்றாலுஞ் சித்தியெலலாம்பெற்றாலு
மனமிறக்கக்கல்லார்க்கு வாயேன்பராபரமே கசுகூ)

வாதுக்குவந்தெதிர்த்த மல்லரைப்போற்பாழ்த்தமன
மேதுக்குக்கூத்தாடுதெந்தாயபராபரமே (கஎய)

சூதாடுவார்போற் றுவண்டுதுவண்டுமனம்
வாதாடினென்னபலன் வாய்க்கும்பராபரமே (கஎக)

கொள்ளித்தேள்கொட்டிக் குதிக்கின்றமெய்க்குரங்காக்
கள்ளமனத்துள்ளுவதென் கண்டாய்பராபரமே கஎஉ)

வந்ததையும்போனதையும் வைத்துவைத்துப்பார்த்திருந்தாற்
சிந்தையிதமகிழ்தஞ்சேரும்பராபரமே கஎங)

ஏறுமயிர்பாலமுனை விந்தவிடயங்கணெருப்
றெனவுநன்று வறிந்தேன்பராபரமே கஎச)

பொறிவழியேயேழை பொறியாயுழல்வதுநின்
னறிவின்விதித்த விதியாமோபராபரமே கஎரு)

பாசசாலங்களெலாம்பறுபட ஞானவைவாள்
வீசுநாளெந்நாள் விளம்பாயபராபரமே கஎசு)

எந்தவுடலேனு மெடுத்தவிடநலலதென்று
சிந்தைசெயவந்தநிறைஞ் செப்பாய்பராபரமே கஎஎ)

பொய்யெல்லாமொன்றாய்ப் பொருந்திவைத்தபொய்யுடலை
மெய்யெனறுன்மெய்யாய விடுமோபராபரமே கஎஅ

மின்னனையபொய்யுடலை மெய்யென்றுநம்பினையோ
நின்னைமறக்கை நெறியோபராபரமே கஎகூ)

நித்தியமொன்றிலலாத நீர்க்குமிழிபோன்றவுடற்
கித்தனைத்தானின்பமுண்டோ வென்னேபராபரமே

தேகமிகுமென்றுசடர் தேமபுவதென்னித்திரையி
னாகமதிந்தாற்பயந்தா னுண்டோபராபரமே (கஅக)

ஏதச்சுமையா வெடுப்பாரெடுத்தவுடற்
சேதமுறின்யாதுபின்னே செல்லும்பராபரமே [கஅஉ]

தோர்பரவைநாலாட் சுமையாகுஞ்சிவனென்றிக்
கார்பாலெடுத்ததேவ ராலேபராபரமே [கஅ௩]

ஞாலத்தைமெய்யெனவே நம்பிநம்பிநாளுமென்றன்
காலத்தைப்போக்கியென்ன கண்டேன்பராபரமே[கஅச]

பொய்யுலகவாழ்க்கைப் புலைச்சேரிவாதனைநின்
மெய்யருளின்மூழ்கின் விடுங்காண்பராபரமே [கஅரு]

நூலேணிவிண்ணேற நூற்குப்பவித்திவைப்பார்
போலேகருவிநன்னூற் போதம்பராபரமே [கஅசு]

சின்னஞ்சிறியார்கள் செய்தமணற்சோற்றையொக்கு
மன்றுங்கலைஞான மாககம்பராபரமே [கஅஎ]

வாசகஞானத்தால் வருமோசுகம்பாழ்த்த
பூசலென்றுபோமோ புகலாய்பராபரமே [கஅஅ]

கேட்டதையேசொல்லுங் கிளிபோலநின்னருளி
னாட்டமின்றிவாய்பேச னன்றோபராபரமே [கஅகூ]

வெளியாயருளில் விரவுமன்பர்தேக
மொளியாய்ப்பிறங்கியது முண்டோபராபரமே [௱கூ0]

காலமொருமூன்றுங் கருத்திலுணர்ந்தாலுமதை
ஞாலந்தனக்குரையார் நல்லோர்பராபரமே [ககூக]

கொல்லாவிரதமொன்று கொண்டவரேநல்லோர்மற்
றல்லாதார்யாரோ வறியேன்பராபரமே [ககூஉ]

இல்லாதகாரியத்தைத யிச்சித்துச்சிந்தைவழி
செல்லாமைநல்லோர் திறங்காண்பராபரமே (ககூ௩)

ஏதுவந்துமேதொழிந்து மென்னதியானென்னார்கள்
போதநிலைகண்ட புலத்தோர்பராபரமே

ஆயிரஞ்சொன்னாலு மறியாதவஞ்சநெஞ்சப்
பேயரொடுகூடிற் பிழைகாண்பராபரமே (ககூரு)

மாயமயக்கொழிந்தாற் மற்றொன்றைநாடுவரோ
நேயவருணிலையி னிற்பார்பராபரமே (ககூசு)

சித்திரையிற்செத்தபிண நேருமுடற்கிச்சைவையாச்
சுத்தர்களேநல்ல துறவோர்பராபரமே (ககூஎ)

என்னெஞ்சமேனு மிரங்குமேநின்னருட்குக்
கன்னெஞ்சருமுளரோ காட்டாய்ப்பராபரமே (ககூஅ)

மந்தவறிவாகியின்பம் வீயாதிருந்தலைந்தாற்
சிந்தைமயங்காதோவென் செய்வேன்பராபரமே [ககூகூ]

தேடினேன்றிக்கனைத்துந் தெண்டனிட்டேன்சிந்தைநைந்து
வாடினேனென்மயக்க மாற்றாய்பராபரமே (உ௱)

மடிமையெனுமொன்றை மறந்தன்றோவென்னை
பிடிக்கொளல்வேண்டு மரசேபராபரமே உ௱க

காலர்பயந்தீரவின்பக் காதகபயமென்றெழுந்த
மாலைவளர்த்தனையே வாழிபராபரமே உகஉ

நீர்புற்புதமாய் நினைவருட்கேநின்றழியப்
பார்ப்பதல்லால்வேறுமொன்றைப் பாரேன்பராபரமே

நீர்க்குமிழிபோலென் னினைவுவெளியாய்க்கரையப்
பார்க்குமிடமெல்லாமென் பார்வைபராபரமே உகச

ஆடியோய்ப்பம்பரம்போ லாசையுடனெங்குமுனைத்
தேடியோய்கின்றேனென் செய்வேன்பராபரமே உகரு

வேதாந்தஞ்சித்தாந்தம் வேறென்னார்கண்களிக்கு
நாதாந்தமோனநலமோ பராபரமே உகசு

ஆனந்தமானநின்னை யன்றியொன்றையுன்னாத
மோனந்தமியேற்கு முத்திபராபரமே உகஎ

ஏதுக்குமுன்னைவிட வில்லையென்றுலென்கருத்தைச்
சோதிக்கவேண்டாநான் சொன்னேன்பராபரமே உகஅ

முத்தியிலுந்தேகமிசை மூவிதமாஞ்சித்திபெற்றோ
ரத்தனைபேரென்றுரைப்ப தெந்தாய்பராபரமே உககூ

நீயன்றிநானார் நினைவாரென்னெஞ்சகமார்
தாயன்றிசூலுமுண்டோ சாற்றாய்பராபரமே உ௱ய

அங்கமேநின்னவடிவ மானசுகர்கூப்பிடநீ
யெங்குமேனேனென்ற தென்னேபராபரமே உகக

கொள்ளைவெள்ளத்தண்ணருண் மேற்கொண்டெழுந்தார்கிழித்தா
கள்ளமனக்கப்பலெங்கே காணும்பராபரமே [ற்

எக்கலையுங்கற்றுணர்ந்தோ ரென்றவர்க்குஞ்சும்மாசொல்
வக்கணையாலின்பம் வருமோபராபரமே உகங

தூல்லெழியப்பாசி தலைக்குந்நன்னீர்காணுநல்லோர்
சொல்லுணரின்ஞானம்வந்து தோன்றும்பராபரமே

நின்னையுணர்ந்தோர்கடமை நிந்தித்தபேயரிஞ்
ஞென்னகதிபெறுவா ரெந்தாய்பராபரமே உகரு

என்னதியானென்னலற்றோ ரெங்கிருந்துபார்க்கினுநின்
சன்னிதியாநீபெரிய சாமிபராபரமே உகசு

சோற்றுத்துருத்திச் சுமைசுமப்பக்கண்டிதுவக
கார்றைப்பிடித்தலைந்தேன் கண்டாய்பராபரமே உகஎ

உள்ளபடியொன்றை யுரைக்கின்வார்க்கவர்க்குத்தோற்றலாய்க்
கள்ளமின்றியன்பாய்க் களிப்பேன்பராபரமே உகஅ

அடுத்தவியல்பாகவொன்றை யான்பகர்வதல்லாற்
றொடுத்தவொன்றையான்வேண்டிச் சொல்லேனேபராபர

உள்ளம்றியாதொருவ ரொன்றையுன்னிப்பேசிலதோ
துள்ளியிளங்கன்றாய்த் துடிப்பேன்பராபரமே (உஉ௰)

எல்லாருமின்புற றிருக்கநினைப்பதுவே
யல்லாமல்வேறொன் றறியேன்பராபரமே (உஉக)

முன்னாண்மெய்ஞ்ஞான முனிவர்தவமீட்டதெல்லோ
யிந்நாளிற்காணவெனக் கிச்சைபராபரமே (உஉஉ)

கன்மமென்பதெல்லாங் கரிசறவேமெய்ஞ்ஞான
தன்மநிலைசார்ந்ததன்பர் தன்மைபராபரமே (உஉங)

கண்டவிலாதென்னறிவின் கண்ணூடேகாட்சிபெற
மண்டியபேரொளிநீ வாழிபராபரமே (உஉச)

காணாதன்மையென்று நாடாமனாடவின்ப
வாணாகிநின்றனைநீ வாழிபராபரமே (உஉரு)

அகத்தாடணுவணுவா யண்டமெல்லாந்தானாய்
மகத்தாகிநின்றனைநீ வாழிபராபரமே (உஉசு)

காரகமாங்கர்ப்பவறைக் கண்ணூடுமென்கண்ணே
வாரம்வைத்துக்காத்தனைநீ வாழிபராபரமே (உஉஎ)

பிறந்தோர்தந்தேசமென்பார் பூமியையோராடி
யிறந்தோருந்தம்மதென்பா ரென்னேபராபரமே (உஉஅ)

மூர்த்தியெல்லாம்வாழியெங்கண் மோனகுருவாழியருள்
வார்த்தையென்றும்வாழியன்பர் வாழிபராபரமே (உஉகூ)

சொல்லும்பொருளுந் தொடராவருணிறைவிற்
செல்லும்படிக்கருணீ செய்தாய்பராபரமே (உங௰)

இற்றைவரைக்குள்ளாக வெண்ணரியசித்திமுத்தி
பெற்றவர்களெத்தனைபேர் பேசாய்பராபரமே (உஙக)

காடுநகருநிசா னாட்டியபாளையமு
மீடுசெயுமோமுடிவி லெந்தாய்பராபரமே (உஙஉ)

தேடுந்திரவியமுஞ் சேர்ந்தமணிப்பெட்டகமுங்
கூடவருந்துணையோ கூறாய்பராபரமே (உஙங)

தேடாததேட்டினரே செங்கைத்துலாக்கோல்போல்
வாடாச்சமநிலையில் வாழ்வார்பராபரமே (உஙச)

நீராய்க்கசிந்துருகி நெட்டுயிர்த்துநின்றேனைப்
பாராததென்னே பகராய்பராபரமே (உஙரு)

உள்ளபொருளாவியுடன் [illegible]
கொள்ளை[illegible]பராபரமே (உஙசு)

ஆழ்ந்தாயே[illegible]
[illegible] (உஙஎ)

தாராவருளையெல்லாந் [illegible]
வாராயோ[illegible] (உஙஅ

ஆசையுனையீதல்லா லருளறியவேறுமொரெறிற்
பாசம்வையேனின்கருணைப் பாங்காற்பராபரமே (உசங)

ஆதியந்தநீகுருவா யாண்டதல்லானின்னையன்றிப்
போதனையுமுண்டோ புகலாய்பராபரமே (உசய)

தானாகவந்து தடுத்தாண்டெனையின்ப
வானாகச்செய்தவின்ப வானேபராபரமே (உசக)

பற்றற்றிருக்குநெறி பற்றிக்கடன்மலையுஞ்
சுற்றமினைக்குமனஞ் சொன்னேன்பராபரமே (உசஉ)

படிப்பற்றுக்கேள்வியற்றுப் பற்றற்றுச்சிந்தைத்
துடிப்பற்றார்க்கன்றோ சுகங்காண்பராபரமே (உசங)

சத்தாகின்றோர சடங்களிலிங்கமென
வைத்தாருமுண்டேயென் வாழ்வேபராபரமே (உசச)

சித்தமிருவிகற்பஞ் சேர்ந்தாருடற்றீபம்
வைத்தகர்ப்பூரம்போல் வயங்கும்பராபரமே (உசரு)

ஆதிகாலத்திலெனை யண்டனையேயிப்பானீ
போதியெனினெங்கேநான் போவேன்பராபரமே (உசசு)

நாவழுத்துஞ்சொன்மலரோ நாலுதிக்கும்பொன்மலரோ
தேவையுனக்கினனதென்று செப்பாய்பராபரமே (உசஎ)

கன்னனமரும்பாகாய்க் கருப்புவட்டாய்க்கற்கண்டா
யின்னமுதாயென்று ளிருந்தாய்பராபரமே (உசஅ)

சிற்பரமேதற்பரமே தெய்வசுருதிசொன்ன
வற்புதமேயன்பே யறிவேபராபரமே (உசகூ)

அறிவிப்பாநீயென்றாலம் புலன்கடந்தந்
நெறியிற்பாரியாரே நிகழ்த்தாய்பராபரமே (உருய)

அந்தக்கரணமெனு மாகாதபேய்களெனை
வந்துபிடித்தாட்ட வழக்கோபராபரமே (உருக)

ஐவரொடுங்கூடாம லந்தரங்கசேவைதந்த
தெய்வவறிவே சிவமேபராபரமே (உருஉ)

அருளாகின்ற சுகமாகாமலையோ
விருளாகிநிற்க வியல்போபராபரமே (உருங

அன்பரெல்லாமின்ப மருந்திடவுமியானொருவ
னுன்புறுதன்னன்றோநீ சொல்லாய்பராபரமே (உருச)

சந்ததமுமின்கருணை சாற்றுவதல்லால்வேறு
சிந்தையறியேனுன் சித்தம்பராபரமே (உருரு)

நானெனைக்குள்ளது காட்டத்தாலென்னைவிட்டுப்
போனதுமுன்னைவிட்டுப் போகேன்பராபரமே (உருசு)

இக்காயம்பொய்யென்றே யீட்டத்துனைக்கபயம்
புக்காதாருண்டோ புகலாய்பராபரமே (உருஎ)

தானுதல்பூரணமே சாருமிடமுண்டெனினும்
வானாதியுமெ மாழுங்காய் மன்னும்பராபரமே (௨௫௮)

உன்னுமனங்கர்ப்பூர வுண்டைபோலகரைய
மின்னுமானந்த விளக்கேபராபரமே (௨௫௯)

நர்ட்பட்டலலைந்த நடுக்கமெல்லாந்தீரவுனக
காட்பட்டுந்துளபமெனக் காமோபராபரமே (௨௬௰)

பாவிபடுங்கண்கலக்கம் பார்த்துமிரங்காதிருந்தா
லாவிகருது துணையா ரையாபராபரமே (௨௬௧)

நின்றைறவேதாரகமாய் நின்றுககமெய்தாம
லெனனிறைவேபாவித்தே னெனனேபராபரமே (௨௬௨)

நின்னைச்சரண்புகுந்தா னீகாககல்வேண்டுமெல்லா
லெனனைபபுரமவிடுத லெனனேபராபரமே (௨௬௩)

மாறாதுன்பமெல்லாம் வந்துரைத்தானின்செவியி
லேறுதவாறே தியம்பாய்பராபரமே (௨௬௪)

விஞ்சுபுலப்பாடனைத்தும் விறுதுன்பஞ்செய்யவந்த
வஞ்சுபுயிவேடருககு மாறறேன்பராபரமே (௨௬௫)

கன்னநகரியவிறக காமாதிராக்ஷசப்பேய்க்
கெனனைபிலககாகவைத்த தென்னேபராபரமே (௨௬௬)

சித்திநெறிகேட்டல செகமயக்கஞ்சென்மமற
முதநிநெறிகேட்டன முறைகாண்பராபரமே (௨௬௭)

சிந்தைசிதயச சிதையாதவானந்த
மெந்தவகையாலேவந் தெயதும்பராபரமே (௨௬௮)

கூர்த்தவழிவாலறியக் கூடாதெனக்குவரன்
றோர்த்தபடிதானே திரிந்தேனபராபரமே (௨௬௯)

பத்தருந்தும் பரமசுகம்யானருந்த
வெததனைநாள்செல்லு மியம்பாயபராபரமே (௨௭௰)

தீரத்திறுற்றுறவு சேர்மலிவ்வுலகிற்
பாரத்தனபேசல பண்போபராபரமே (௨௭௧)

யிந்தவெளியினையுண் டேப்பமிடப்பேறறிவாத
தந்தவெளிககேவெளியாச சார்ந்தேனபராபரமே (௨௭௨)

உணர்த்துமுனைநாடா துணர்ந்தவையேநாடி
பிணக்குருமெனனேழைமைதா னெனனேபராபரமே (௨௭௩)

உண்டுபோலின்று முலகைத்திரமெனவுட்
கொணடுகொன்பெற்றபலன கூறுய்பராபரமே (௨௭௪)

உள்ளபடியாதுமெள உற்றுணர்ந்தேனக்கணமே
கள்ளமனம்போனவழி காணேன்பராபரமே (௨௭௫)

சித்தமவனன் செயலவாகவெலாமவனன்

பொய்யகலமெய்யான போதநிலைகண்டோர்க்கோ
ரையமிலையையமில்லை யையாபராபரமே

மந்திரத்தையுன்னிமயங்காதெளக்கினியோர்
தந்திரத்தைவைக்கத் தாகாதோபராபரமே [௧௧௬]

வின்கருணைபூத்ததென்ன மேவியுயிர்க்குயிராய்த்
தன்கருணைதோன்றவரு டாய்நீபராபரமே [௧௧௭]

தன்மயமாய்நின்றநிலை தானேதானாகிநின்று
னின்மயமாயெல்லா நிகழும்பராபரமே [௧௧௮]

பங்கியிடையுநெஞ்ச வேழையைநீவாவென்றே
பாங்குபெறச்செய்வதுனமேற் பாரம்பராபரமே [௧௧௯]

ஆண்டநின்னைநீங்கா வடிமைகள்யாமாணவத்தைப்
பூண்டதென்னகனமம் புகலாய்பராபரமே (௧௨௰)

ஏகனுநீயென்று விருந்தபடியெய்தாம
லங்குமிங்குமெனநிலைய லாமோபராபரமே [௧௨௧]

கற்குமதுவுண்டு களித்ததெல்லாநின்னருளி
னிற்குமதுதந்ததுண்டோநீதான்பராபரமே ௧௨௨

அண்டபகிரண்டமரியாதநின்வடிவைக்
கண்டவரைகண்டாற் கதியாம்பராபரமே [௧௨௩]

கலக்கமுறநெஞ்சைக் கலக்கிதிரும்பத்
துலக்குபவனியலையோ சொல்லாய்பராபரமே [௧௨௪]

சிந்தையுமென்போலச் செயலற்றடங்கிவிட்டால்
வந்ததெலாநின்செயலா வாழ்வேனபராபரமே [௧௨௫]

பந்தமெல்லாதீரப் பரஞ்சோதிநீகுருவாய்
வந்தவடிவை மறவேன்பராபரமே [௧௨௬]

தானந்தமான சகசநிருவிகற்ப
வானந்தனிட்டையரு ளையாபராபரமே ௧௨௭)

அலலலெல்லாந்தீரவெனக் கானந்தமாகவொரு
சொல்லலயென்பால்வைத்தத்தை யென்சொல்வேன்பராபரமே

சிந்தைமயக்கமறச் சின்மயமாஙினின்றவுன்னைத்
தந்தவுனக்கெனனையுநான் றந்தேனபராபரமே ௧௨௯

மைகாட்டுமாயை மயக்கமறநீகுருவாய்க்
கைகாட்டவுங்கனவு கண்டேனபராபரமே ௧௩௰

மாலவைத்தசிந்தை மயக்கறவென்சென்னிமிசைக்
கால்வைக்கவுங்கனவு கண்டேன்பராபரமே ௧௩௧

மண்ணாதிமாயையெல்லா மாண்டுவெளியாகவிரு
கண்ணாரவுங்கனவு கண்டேன்பராபரமே ௧௩௨

மண்ணீர்மையாலே மயங்காதுனகையாலென்
கண்ணீர்துடைக்கவுநான் கண்டேன்பராபரமே ௧௩௩

உள்ளதுணரா வுணர்விமாபாவியெனறே
மெள்ளமெள்ளக்கைநெகிழ விட்டாயபராபரமே (௧௩௪)

எல்லாநினதுசெய லென்றெண்ணுமெண்ணமுநீ
யல்லாலெனக்குளதோ வையாபராபரமே ,(௧௩௫)

பந்தமயக்கிருக்கப் பறறொழிந்தேனென்றுளரு
மிந்தமயக்க மெனக்கேனபராபரமே (௧௩௬)

காட்சியெல்லாங்கண்ணைவிடக் கண்டதுண்டோயாநினுக்கு
மாட்சியுனதருளே யனறோபராபரமே

எட்டுத்திசையுமொன்று மின்பமாகினறவுன்னை
விட்டுப்பிரியவிடம வேறோபராபரமே [௧௩௮]

பிரியாதுயிர்க்குயிராயப்பின்னமறவோங்குஞ்
செறிவேயறிவே சிவமேபராபரமே (௧௩௯)

ஏதேதுசொன்னாலு மெள்ளளவுநீயிரங்காச
ரூதேதெனக்குளவு சொல்லாய்பராபரமே (௧௪௰)

கற்பனையாப்பாடுகின்றேன் கண்ணீருங்கம்பலையுஞ்
சொற்பனத்துங்காணேனெனசொலவேன்பராபரமே.

வன்பொன்றுநீங்கா மனதிருப்பமாறுப்பே
ரன்பொன்றுமபோது மெனக்கையாபராபரமே (௧௪௨)

ஏதுந்தெரியா வெளியேனைவாவெனநின்
போதநிலைகாட்டிற பொருறோபராபரமே (௧௪௩)

ஓராமலெல்லா மொழிந்தேறுன்றெய்வவரு
டாராதிருக்கத்தகுமோபராபரமே [௧௪௪]

மோனந்தருஞான மூட்டியெனக்குவட்டா
வானந்தவாழ்க்கை யருளாய்பராபரமே [௧௪௫]

வாடுமுகங்கண்டென்னை வாடாமலேகாத்த
நீடுங்கருணை நிறைவேபராபரமே [௧௪௬]

புந்தியினுநின்னடியைப் போற்றுகின்றமெய்யடியார்
சிந்தையிறப்போநின் றியானம்பராபரமே [௧௪௭]

உனக்குவமையாக்கருணை யுள்ளவருமன்மைக்
கெனக்குவமையானவரு மில்லைபராபரமே [௧௪௮]

தாயிருந்தும்பிள்ளை தளர்ந்தாற்போலவ்விடதது
நீயிருந்துநான்றளர்ந்து நின்றேன்பராபரமே [௧௪௯]

வாயாற்கிணறுகெட்ட வாறேபோல்வாயபேசிப்
பேயானாக்கின்பமுண்டோ பேசாய்பராபரமே [௧௫௰]

பாவமென்றாலேதும் பயமின்றிசசெய்யவிந்தச்
சீவனுக்கார்போதந் தெரிந்தார்பராபரமே [௧௫௧]

இன்பநிருவிகற்ப மின்றேதான்வன்றெனிலோ
துன்பம்பொறுப்பரிது சொன்னேன்பராபரமே [௧௫௨]

கற்குநிலைகற்றுங் கருவியவிழாதருளாய
நிற்குநிலைகற்பதுவே நீதம்பராபரமே [௱௫௩]

காச்சுச்சுடர்விடும்போற கட்டிபோனின்மலமாய்
பேச்சறநவரே பிறவார்பராபரமே [௱௫௪]

பற்றொழிந்துசிந்தைப் பகைப்பொழிந்துதானேதா
னற்றிருப்பதென்னாட் கமைப்பாய்பராபரமே [௱௫௫]

உருவெளிதான்வாதவூ உத்தமாக்கல்லாலினரும்
குருவழியினோர்க்குமுண்டோ கூறாய்பராபரமே [௱௫௬]

தேகமியாதேனுமொரு சித்திபெறசீவன்முத்தி
யாகுநெறிநல்லநெறியையாபராபரமே ௱௫௭

உலகநெறிபோற்சடல மோயவுயிர்முத்தி
யிலகுமெனல்பந்த வியல்போபராபரமே ௱௫௮

பரமாய்பரவெளியாற் பார்ப்பதல்லான்மற்றெவர்க்கும்
திரமேதுமில்லைகன்றாய்த் தேர்ந்தேன்பராபரமே ௱௫௯

தேடுவேனின்னருளைத்தேடுமுன்னமேயெய்திட
மாடுவேனானந்த மாவேன்பராபரமே ௱௬௰

உள்ளங்குழைய வுடல்குழையவுள்ளிருந்த
கள்ளங்குழையவென்று காண்பேன்பராபரமே [௱௬௧]

பட்டப்பகற்போலப் பாழ்த்தசிந்தைமாளிகெல்லாம்
வெட்டவெளியாக விளங்கும்பராபரமே [௱௬௨]

பார்கினூடுப்போற்கிடந்த பாழ்சிந்தைமாளிகென்னை
யார்க்குஞ்சரியிடலா மையாபராபரமே [௱௬௩

பாட்டுக்கோவன்பினுக்கோ பத்திக்கோவன்பர்தங்க
ளீட்டுக்கெல்லாங்குறுகி னின்றாய்பராபரமே ௱௬௪

முத்தாந்தவித்தே முளைக்குநிலமாயெழுந்த
சித்தாந்தமார்க்கச் சிறப்பேபராபரமே ௱௬௫

உன்றுவெளியாயுரக்காதபேருணர்வா
யென்றுவிக்குள்ளே யிருந்தாய்பராபரமே ௱௬௬

தத்துவமெல்லாமகன்ற தன்மயர்க்குச்சின்மயமா
னித்தமுத்தசுத்த னிறைவேபராபரமே ௱௬௭

உள்ளக்கொதிப்பகலவுள்ளுள்ளேயானந்த
வெள்ளமலர்க்கருணை வேண்டும்பராபரமே ௱௬௮

என்னைப்பிறப்பதருளின்கடனுமென்கடனு
னின்னிறபணியரவே னிற்கைபராபரமே ௱௬௯

தானேயாநன்னிலையைத் தந்தவருளானந்த
மானேமனாதீத வாழ்வேபராபரமே ௱௭௰

மண்ணாதிபூதமெல்லாம் வைத்திருந்தநின்னிறைவைக்
கண்ணாரக்கண்டு களித்தேனபராபரமே ௱௭௧

அறியாமையென்னுமறிவீனந்தவளவேதான்
பிரியாவருணிலையும் பெற்றேனேபராபரமே (௩௭௨)
நினைவுநனவெனவுந்தேர்ந்துநானென்றோர்ந்தபடி
யேதுநடக்கவொட்டா தென்னேபராபரமே (௩௭௩)
கண்டவழியகண்டாகாரமெனமெய்யறிவிற்
கொண்டவர்க்கேமுத்திகொடுப்பாய்பராபரமே (௩௭௪)
ஈருகவல்வினைநா னென்னுமலினபக்கம்
பேரும்படிக்கடிமைபெற்றேன்பராபரமே (௩௭௫)
பெற்றாரநுபூதி பேசாதமோனநிலை
கற்றாருன்னைப்பிரியார் கண்டாய்பராபரமே (௩௭௬)
நீயேநானென்றுநினைப்புமறப்புமறத்
தாயேயனைவந்தடைந்தாய்பராபரமே (௩௭௭)
சஞ்சலமற்றெல்லாமொன்றாயுணர்ந்தேனென
னஞ்சலியுங்கொள்ளாயரசேபராபரமே (௩௭௮)
பூதமுதலனைத்தும் பொய்யென்றமெய்யரெல்லாங்
காதலித்தவிளக்கநிலைபராபரமே (௩௭௯)
வாக்குமனமொழியப்பால் வான்கனந்தயல்லாலவைவேறாய
போகமுடையவாநந்தப் பொருந்தேகனபராபரமே (௩௮௰)
வன்மையினாற்பொல்லாமற்றுணர்வாயக்காகெடுவேன்
றன்மையொன்றுந்தோயாத தடையோபராபரமே (௩௮௧)
பத்தர்சித்தர்வாழியன்பர்வாழிசெங்கோல
வைத்தவர்கள்வாழிநீ வாழிபராபரமே (௩௮௨)
கல்லாதேனானாலுங் கற்றுணர்ந்தமெய்யடியார்
சொல்லாலேநின்னைத் தொடர்ந்தேன்பராபரமே (௩௮௩)
சொல்லிறப்பச்சற்குருவாய்த் தோன்றியெனக்கொடுத்த
நல்லுரைக்கேகொத்தடிமை நானன்காண்பராபரமே (௩௮௪)
முத்திக்குவித்தான மோனக்கருமுபுவழி
தித்தித்திடவிளைந்த தேனேபராபரமே (௩௮௫)
நித்திரையும்பாழ்த்தநினைவுமற்றுநிற்பதுவோ
சுத்தவருணிலைநீசொல்லாய்பராபரமே (௩௮௬)
மண்ணுமறிகடறு மற்றுளவுமெல்லாமுள
கண்ணிலிருக்கவுநான் கண்டேன்பராபரமே (௩௮௭)
பூட்டிவைத்துவஞ்சப் பொறிவழியேயென்றனைநீ
யாட்டுகின்றதேதோவறியேன்பராபரமே (௩௮௮)
பொய்யுணர்வாயிந்தப்புழுக்கூட்டைக்காத்திருந்தே
னுய்யுமவகையுமுளதோபராபரமே (௩௮௯)

பராபரக்கண்ணி-முற்றுப்பெற்றது-ஆ-௬௨௫.

# பைங்கிளிக்கண்ணி



அந்தமுடனாதி யளவாமலென்னறிவிற்
சுந்தரவான்சோதி துலங்குமோபைங்கிளியே (க)

அகமேவுமண்ணாதிகளெ னல்லவெல்லாஞ்சொலவிச்
சுகமானநீபோய்ச் சுகங்கொடுவாபைங்கிளியே (உ)

ஆவிக்குளாவியெனு மற்புதனார்சிற்சுகந்தான்
பாவிகளுக்கிட்டுமோ சொல்லாய்நீபைங்கிளியே (௩)

ஆருமறியாமலென்னை யந்தரங்கமாகவந்து
சேருமபடியிறைக்குச் செப்பிவாபைங்கிளியே (௪)

ஆறானகண்ணீர்களென னங்கபங்கமானதையுங்
கூறாதவென்னேகுதலைமொழிப்பைங்கிளியே (௫

இன்பருவவாடையழுக் கேறுமெமக்கண்ணல்சுத்த
மெய்ப்பரமாமாடை யளிப்பானோபைங்கிளியே (௬)

உண்மையொன்றிரண்டென் றோராமலவீட்டுநெறி
சொன்னவரவுவகை சொல்லாய்நீபைங்கிளியே (௭)

ஊருமிலாப்பேருமிலா நற்றூர்பொற்றுடனே
யாருமிலாரெனனை யறிவாரோபைங்கிளியே (௮)

ஊரைப்பாராமலெனைச் சூளாகத்துநாயகனார்
சீரைப்பாராதார்க்கருணை செயவாரோபைங்கிளியே (௯)

என்றுவிடியுமிறை வாவோவெனவென்று
நின்றநிலையெல்லா நிகழ்த்தாய்நீபைங்கிளியே (௰)

எந்தமடலூடு மெழுதாவிறைவடிவைச்
சிந்தைமடலாவெழுதிச் சேர்ப்பேனோபைங்கிளியே ௰க)

கண்ணுண்மணிபோலப் பங்காடியெனைப்பிரிந்த
திண்ணியருமின்னம்வந்து சேர்வாரோபைங்கிளியே (௰உ)

ஏடாமலர்சூடே னெமபெருமான்பொன்னடியாம்
வாடாமலர்முடிக்கு வாய்க்குமோபைங்கிளியே (௰௩)

கல்லேன்மலரேன் கனிந்தவனைப்பூசையென்ற
நல்லோர்பொல்லாவினையு மாடுவரோபைங்கிளியே (௰௪)

கண்டதனைக்கண்டு கலக்கந்தவிரெனவே
விண்டபொருமானையுநான் மேவுவனோபைங்கிளியே (௰௫)

காணாதகாட்சி கருத்துவந்துகாணாமல்
வீணாள்கழித்துமெலிவேனோபைங்கிளியே (௰௬)

காந்தமிரும்பைக் கவர்ந்திழுத்தாலென்னவருள்
வேந்தனெனையிழுத்து மேவுவனோபைங்கிளியே (கஎ

காதலால்வாடினதுங் கண்டெனையேயெம்மிறைவர்
போதரவாயின்பம் புசிப்பேனோபைங்கிளியே (கஅ)

கிட்டிக்கொண்டன்பருண்மை கேளாப்பலவடிகொள்
பட்டிக்குமின்பமுண்டோசொல்லாய்நீபைங்கிளியே கக)

விட்டோர்நெஞ்சிற் கிளர்வார்தழுவவென்று
றொட்டோராரவரவா நேசமென்றோ பைங்கிளியே

கூறுங்குணமுமில்லாக் கொள்கையினோ ரென்கவலை
யாறும்படிக்கு மணைவாரோ பைங்கிளியே (௨௧)

சின்னஞ்சிறியேனைநன் சிந்தைகவர்ந்தாரினிநா
னன்னந்தனியே தவிப்பேனோ பைங்கிளியே (௨௨)

சிந்தைமருளைத் தெளிவித்தென்னையாள
வந்தகுருநாதனருள்வாய்க்குமோ பைங்கிளியே (௨௩)

சொல்லிறந்துநின்ற சுகரூபப்பெருமானை
யல்லும்பகலுமணைவேனோ பைங்கிளியே [௨௪)

தற்போதத்தாலே தலைகீழதாகவைய
னற்போதவின்புவ நாட்செலுமோ பைங்கிளியே (௨௫

தனையறியுந் தருணந்தனிற்றலைவ
ரென்னையணையாதவண்ணமெங்கொளித்தார் பைங்கிளியே(௨௬)

தாயகரியமையெல்லாந் தந்தனைவிட்டிவாருளாம்
பாங்கியைச்சேர்ந்தாரிதைக்குப் பணபோசொல் பைங்கிளியே

தாவியதோர்மாயக்கட்டழுந் தன்மைவிட்டேயண்ணலிடத்
தோவியம்போனிற்பவென்னை யுராதவரோ பைங்கிளியே (௨௮)

தீராக்கருவழக்கைத் தீரவிட்டவென்னைப்பினிப்
பாரேறுதாண்டானைப் பற்றுவனோ பைங்கிளியே (௨௯)

தூங்கிவிழித்தென்னபலன் றூங்காமற்றூங்கிநிற்கும்
பாங்குகண்டாலன்றோ பலன்காண்பேன் பைங்கிளியே (௩௰)

தொல்லைக்கவலை தொலைத்துக்கதுல்யாத
வெல்லையிலாவின்பமயமெய்துவனோ பைங்கிளியே (௩௧)

நன்னெஞ்சத்தன்பரெல்லா நாதனைச்சேர்ந்தின்பமுற்றார்
வன்னெஞ்சத்தாலேநான் வாழ்விழந்தேன் பைங்கிளியே (௩௨)

கானேகருதினவர் நாடராசும்மாவிருந்தாற்
றானேயணைவர்வா தன்மையென்னோ பைங்கிளியே (௩௩)

நீர்க்குமிழிபோலுறவுடனிற்கையிலேசாசுவதஞ்
சேர்க்கவரியாமற் றிகைப்பேனோ பைங்கிளியே (௩௪)

நெஞ்சகத்தில்வாழ்வார் நினைக்கினவேறென்றனையார்
வஞ்சகத்தாலலரவர் மார்க்கமென்னோ பைங்கிளியே (௩௫)

பன்முத்திரைச்சமயம் பாழ்படக்கல்லாலடிவாழ்
சின்முத்திரையாசைச் சேர்வேனோ பைங்கிளியே (௩௬)

பச்சைகண்டநாட்டிற் பறக்குமுன்னைப்போற்பறந்தே
னிச்சையெல்லாமண்ணாற் கியம்பிவா பைங்கிளியே (௩௭)

பாசந்தஞ்செய்ந்துன்பம் பாராமலெம்பெருமா
ராசைதந்ததுன்பமதற் காற்றேனோ பைங்கிளியே (௩௮)

பாராசை யற்றிறையைப் பற்றறநான் பற்றிநின்ற
பூராய மெல்லாம் புகன்றுவா பைங்கிளியே (௩௯)

பேதைப் பருவத்தே பின்றொடர்ந் தென்பக்குவமுஞ்
சோதித்த வண்ணல்வந்து தோய்வாரோ சொல்பைங்கிளியே (௪௰)

பைம்பயிரை நாடுமுன்போற் பார்பூத்த பைங்கொடிபோற்
செம்பயிரை நாடித் திகைத்தேனே பைங்கிளியே (௪௧)

பொய்க்கூடு கொண்டு புலம்புவனே யெம்மிறைவர்
மெய்க்கூடு சென்று விளம்புவா பைங்கிளியே (௪௨)

பொய்ப்பணிவேண் டேனைப் பொருட்படுத்தி யண்ணலென்பான்
மெய்ப்பணியுந் தந்தொருகால் மேவுவனோ பைங்கிளியே (௪௩)

மண்ணுறங்கும் விண்ணுறங்கும் மற்றுளவெலா முறங்குங்
கண்ணுறங்கே னெம்மிறைவர் காதலாற் பைங்கிளியே (௪௪)

மட்டுப் படாத மயக்கமெலாந் தீரவென்னை
வெட்டவெளி விட்டிலண்ணல் மேவுவனோ பைங்கிளியே (௪௫)

மாலை வளர்த்தென்னை வளர்த்திறைவர் பன்னெறியாம்
பாலைவனத் தில்விட்ட பாவமென்னோ பைங்கிளியே (௪௬)

மெய்வினையை மாற்றவிழ்த்த மெத்தவுண்டெம் மண்ணறந்த
மையனோய் தீர்க்க மருந்து முண்டோ பைங்கிளியே (௪௭)

மேவுபஞ்ச வண்ண முற்றாய் வீலாசிறையா லல்லலுற்றாய்
பாவிபஞ்ச வண்ணம் பகர்ந்துவா பைங்கிளியே (௪௮)

வாய்திறவா வண்ணமென்னை வைத்தாண்டாற் கென்றுயரை
நீதிறவாச் சொல்லி நிசமாங்கா ணைபைங்கிளியே (௪௯)

வாட்டப் படாத மவுனவின்ப நகையாலே
காட்டிக் கொடுத்தானைக் காணபேனோ பைங்கிளியே (௫௰)

வாராவர வாக வந்தருளு மோனருக்கென்
பேராசை யெல்லாமபோய்ப் பேசிவா பைங்கிளியே (௫௧)

விண்ணவர்தம் பாலமுதம் வேம்பங்காயாக வெனப்பாற
பண்ணியதெம் மண்ணன்மயல் பார்த்தாயோ பைக்கிளியே (௫௨)

விண்ணூறுள வெளியடங்கி வேறறத் தென்னவருட்
கண்ணூளடங் கிடவுங் காண்பேனோ பைங்கிளியே (௫௩)

விண்ணூர் நிலவுதவழ் மேடையிலெல் லாமுற்ற
மண்ணுறனை விட்டிலென்னை வைத்ததென்னோ பைங்கிளியே (௫௪)

உள்ளத்தி லுள்ளே யொளித்திருந்தென் கள்ளமெலாம்
வள்ளலறிந் தாலெனக்கு வாயுமுண்டோ பைங்கிளியே (௫௫)

ஆகத்தை நீக்குமுன்னே யாவித்துணை வரைநான்
றாகத்தின வண்ணந் தழுவுவனோ பைங்கிளியே (௫௬)

தானேசபா வகத் தலைப்படநின் றாளனைத்தான்
வானவரும் வருவாரோ பைங்கிளியே (௫௭)

பொய்கண்டார்காணுப் புனிதமெனுமத்துவித
மெய்கண்டநாதனருள் மேவுநாளெந்நாளோ (ச)
பாதிவிருத்தத்தாலிப் பார்விருத்தமாகவுண்மை
சாதித்தார்பொன்னடியைத் தான்பணிவதெந்நாளோ (ரு)
சிற்றம்பலமன்னுஞ் சின்மயாந்தில்லைநகர்க்
கொற்றங்குடிமுதலைக் கூருநாளென்னாளோ (சு)
குறைவிலருண்ஞானமுதல் கொற்றங்குடியடிக
ணாமலர்த்தாட்கன்புபெற்று நாமிருப்பதெந்நாளோ (எ)
நாளவங்கள்போகாம னன்னெறியைக்காட்டியெமை
யாளவந்தசோலங்கட் கன்புவைப்பதெந்நாளோ (அ)
என்னறிவையுளடக்கி யென்போல்வருமவுனி
தன்னறிவுக்குள்ளேநான சாருநாளெந்நாளோ (கூ)
ஆறுமொன்றைநாடினதற் காருமுண்டாமென்றெமக்குக்
கூறுமவுனியருள் கூடுநாளெந்நாளோ (ய)
நில்லாமகின்னருளை கேசேபாரெனறவொரு
சொல்லான்மவுனியரு டோற்றுநாளெந்நாளோ (யக)
வைதிகமாஞ்சைவ மவுனிமவுனத்தளித்த
மெய்திகழ்ந்தென்னைல்லல விடியுநாளெந்நாளோ (யஉ)
வாக்குமனமற்ற மவுனிமவுனற்தருளோ
தாக்கவுமென்னல்லலெல்லாந்தட்டழிவதென்னாளோ (யங)

முற்றுப்பெற்றது-ஆ-தூான.

---

## அடியார்வணக்கம்

---

வெம்பந்தந்தீர்த்துலகாள் வேந்தனாயிருஞான
சம்பந்தனையருளார சாருநாளெந்நாளோ (க)
ஏரினசிவபோக மிங்கிவாகசேயெனனவழ
வாரங்கொளசெங்கையாதாள வாரம்வைப்பதெந்நாளோ [
பித்தரிறையெனறறிந்து பேதைபாற்றூதனுப்பு
வித்ததமிழசசமத்தர் மெய்யபுகழவதெந்நாளோ (ங)
போதவூாகாடிய புத்தர்தமைவாதிலவென்ற
வாதவூரையன்னன்பை வாஞ்சிப்பதெந்நாளோ (ச)
ஓட்டுடன்பற்றின்றி யுலகைத்துறந்தசெல்வப
பட்டினத்தார்பதாகிரி பண்புணர்வதெந்நாளோ (ரு)
கண்டதுபொய்யெனறுகண்டா காரசிவமெய்யெனவே
விண்டசிவவாக்கியர்தாள் மேவுநாளெந்நாளோ (சு)
சக்கரவர்த்தி தவராஜயோகியெனு
மிக்கதிருமூலனருள் மேவுநாளெந்நாளோ [எ]

கண்டுமொழிபேசிமனங் கண்டுகொண்டுவிலையாக்
கொண்டுவிடுமாதர்பொய்க் கூத்தொழிவதெந்நாளோ (௩)
காமனைவாவென்றிருணட கண்வலையைவீசுமின்னார்
நாமமறந்தருளை நண்ணுநாளெந்நாளோ (௪)
கண்களில்வெண்பூளைகரப்பக்கருமைபிட்ட
பெண்கண்மயறப்பிழைக்குநாளெந்நாளோ (௫)
வீங்கித்தளர்ந்துவிழு முலையாரமேல்விழுந்து
தூங்குமதன்சோமபைத துடைக்குநாளெந்நாளோ (௬)
கசசிருக்குங்கொங்கை கரும்பிருக்குமினமாற்றம்
வைசசிருக்குமாதர்மயககொழிவதெந்நாளோ (௭)
பசசென்றகொங்கைப் பசுப்பியர்பாழானமய
னச்சென்றறிந்தருளை நண்ணுநாளெந்நாளோ (௮)
உந்திசசுழியாலுளத்தைசசுழித்தகன
தந்தித்தனத்தார் தமைமறப்பதெந்நாளோ (௯)
தட்டுவைத்தசேலைகொய்சசகத்திற்சிந்தையெல்லாங்
கட்டிவைக்குமாயமின்னார் கட்டழிவதெந்நாளோ (௰
ஆழாழியென்னவளவுபடா வஞ்சநெஞ்சப்
பாழானமாதர்மயற பறறொழிவதெந்நாளோ (௰௧)
தூயபனித்திங்கள சுடுவதெனப்பித்தேறறு
மாயமடவார மயககொழிவதெந்நாளோ (௰௨)
எழைக்குறும்புசெயு மோகிழையாமோகமெனும்
பாழைககடந்து பயிராவதெநநாளோ (௰௩)
விண்டுமொழிதுளறி வேட்கைவருமொண்டுத்தூந்
தொண்டியாகள்கடகடையபித சுறறொழிவதெந்நாளோ (௰௪)
மெய்யிற்சிலம்பிறகக மேவுமின்பமபோன்மாதர்
பொய்யயின்பின்றென்று பொருந்தநாளெந்நாளே (௰௫)

முற்றுப்பெறறது-ஆ-தூ சஉ

---

## தத்துவமுரைமை.



ஐம்பூதத்தாலேயலகாழிந்ததோஷமற
வெம்பூதநாதனருள் செய்துநாளெந்நாளோ (௧)
சத்தமுதலாம்புணிற சஞ்சரித்தகள்வரெனும்
பித்தர்பயந்தீர்ந்து பிழைக்குநாளெந்நாளோ (௨)
நாளும்பொறிவழியைநாடாதவண்ணமெமமை
யாளும்பொறியாலருள் தருள்வதெந்நாளோ (௩)
வாக்காதியானகன்ம மாயைதம்பால்வீண்காலம்
போக்காமலுண்மை பொருந்துநாளெந்நாளோ (௪)

மனமானவானரக் கைம்மாலையாகாம
லென்னையாளடிகளடி செய்துநாளென்னாளோ (ரு)

வேட்டைப்புலப்புலையர் மேவாதவண்ணமனக்
காட்டைதிருத்திக் கரைகாண்பதெந்நாளோ

உந்துபிறப்பிறப்பை யுற்றுவிடாதெந்தையருள்
வந்துபிறக்கமன மிறப்பதெந்நாளோ (எ)

புத்தியெனுந்துத்திப்பொறியரவின்வாய்த்தேரை
யொத்துவிடாதெந்தையரு ளோங்குநாளெந்நாளோ (அ)

ஆங்காரமெனனுமத யானைவாயிற்கரும்பா
யேங்காமலெந்தையரு ளெய்துநாளெந்நாளோ (கூ)

சித்தமெனும்பௌவத்திரைக்கடலில்வாழ்துரும்பாய்
நிதமலையாதருளினிற்குநாளெந்நாளோ (ய)

வித்தியாதத்துவங்களேழும் வெருண்டோடச்
சுத்தபரபோகத்தைத்துய்க்கு நாளெந்நாளே (யக)

சுத்தவித்தையேமுதலாத் தோன்றுமோரைந்துவகைத்
தத்துவத்தைநீங்கியருள்சாருநாளெந்நாளோ (யஉ)

பொல்லாதகாமப் பிலைதொழிலிலென்னறிவு
சொல்லாமல்நன்னெறியிற் சேருநாளென்றோளோ

அடிகளடிகீழ்க்குடியாயம்வாழாவண்ணங்
குடிகெடுக்குபாழடிமைக் கூறொழிவதென்றோளோ (யச)

ஆனபுறக்கருவியாறு மறுமற்றுளவும்
போனவழியுங்கூடப் புன்முளைப்பதென்றோளோ (யரு)

அந்தகனுகெங்கு மிறுளானவாறுவழியில்
வந்தவிருள வேலைவடியுநாளென்றோளோ (யகூ)

புன்மலத்தைச்சோர்ந்துமல போதமபொருந்துதல்போய்
நின்மலத்தைச்சேர்ந்துமல நீங்குநாளெந்நாளோ (யஎ

கண்டுகண்டுந்தேறுக கலக்கமெலலாநீர்வண்ணம்
பண்டைவினைவேலைப் பறிக்குநாளெந்நாளோ

பங்கூழவினைதான படுசாவியாகவெமக்
கெங்கோனகிரணவெயி லெய்துநாளெந்நாளோ யகூ)

குறித்தவிதமாதியாற கூடும்வினையெல்லாம்
வறுத்தவித்தாம்வண்ண மருள்வந்திடுநாளெந்நாளோ (உய

சஞ்சிதமேயாதி சரககானமுச்சேரும்
வெந்தபொறியாகவருண் மேவுநாளெந்நாளோ (உக)

தேகமுதனுள்காரத்திரண் டொன்றுய்நின்றிலகு
மோகமிகுமாயை மூடியுநாளெந்நாளோ (உஉ)

சத்தமுலதாத்தமைத்திங் கெமக்குணர்த்துஞ்

சுத்தமாமாயைதொடக்குறுவ தெந்நாளோ (௨௩

எம்மைவினையை யிறையையெம்பாறகாட்டாதே
வம்மைதிரோதை யகலுநாளெந்நாளோ (௨௪)

வித்தியாயாய்வந்து நீனேவழிக்குங்கேவலமாஞ்
சத்துருவைவெலனு சமர்த்தறிவதெந்நாளோ ௨௫)

சன்னலபின்னலான சகளமெனுகுப்பையிடை
முன்னேவன்ஞானக்கனலை மூட்டுநாதெந்நாளோ ௨௬)

மாயாவிகார மலமொழிசுத்தாவத்தை
தோயாவருளைத் தொடருநாளெந்நாளோ (௨௭)

முற்றுப்பெற்றது- ஆ௳- தூ௱௬௬.



தன்னுண்மை

உடம்பதியுமென்றுமந்தவூழலெல்லாந்தீரத்
திடம்பெறவேயெம்மைத் தெரிசிப்பதெந்நாளோ (௧)

செம்மையறிவாலறிந்து தேகாதிகளிசைந்த
வெம்மைப்புலப்படவே யாமறிவதெந்நாளோ (௨)

தத்துவமாம்பாழ்த்த சடவுருவைத்தான்சுமந்த
சித்தருவாமெம்மைத் தெரிசிப்பதெந்நாளோ (௩)

பஞ்சப்பொறியையுயிரெனனுமந்தப்பஞ்சமறச்
செஞ்செவேயெமமைத் தெரிசிப்பதென்னாளோ (௪)

அந்தக்கரணமுயிராமென்றவந்தரங்க
சிந்தைக்கணத்திலெமமைத் தேர்ந்தறிவதென்னாளோ

மூக்குணத்தைசீவனென்னு மூடத்தைவிட்டருளா
லக்கணமேயெம்மை யறிந்துகொளவதெனனாளோ (௬)

காலையுயிரென்னுங் காலாதிகள்சொறகேளாமற
சீலமுடனெம்மைத் தெளிந்துகொள்வதென்னாளோ (௭)

வான்கெடுத்துத்தேடிமதி கேடர்போலவெமமை
நானகெடுத்துத்தேடாம னகறிவதென்னாளோ (அ)

முற்றுப்பெற்றது-ஆக-தா௭௭.



அருளியல்பு



ஈனந்தருஞடிது நமக்குவேண்டாமென்
றுனந்தறுட்டிலவதரிபப தெந்நாளோ (௧)

பொய்க்காட்சியான புவனத்தைவிட்டருளா
மெய்க்காட்சியாம்புவனமேவுநாளெந்நாளோ [௨]

ஆதியந்தங்காட்டாம லம்பரம்போலேங்கிறந்த
நீதிலருட்கடலைச்சேருநாளெந்நாளோ [௩]

எட்டுத்திசைக்கீழ்மேலெங்கும்பெருகிவரும்
வெட்டவெளிவின்றுறறின்மெய்தோய்வதெந்நாளோ [ ]

ஆதாரமென்றுசுருதியெல்லாமோலமிடு
மீதானமானவெற்பை மேவுநாளெந்நாளோ (௫)

வெந்துவெடிக்கின்றசிந்தை வெப்பகலத்தண்ணருளாய்
வந்துபொழிகின்ற மழைகாண்பதெந்நாளோ (௬)

சூரியாக்கினிசந்திரர்க டோன்றாச்சுயஞ்சோதிப்
பூரணத்தேயத்திற பொருந்துநாளெந்நாளோ (௭)

கன்றுமனவெப்பக் கலக்கமெலாந்தீரவருட்
டென்றல்வந்துவீசுவெளி சேருநாளெந்நாளோ (௮)

கட்டுமனசெயகோல கடாவடிகருங்கோலாக
வெட்டவெளிப்பொருளை மெவுநாளெந்நாளோ (௯)

சாலகபாடத்தடை நீரவெம்பெருமா
னேலககமண்டபத்து ளாடுநாளெந்நாளோ (௰)

விண்ணவன்றானென்னும வெளிகிலாமண்டபத்திற்
றண்ணிருந்தித் தளாவொழிவதெந்நாளோ (௰௧)

வெய்புலிபார்த்து விழித்திருந்தவல்லறைத்
துயயவருள்க றுயிலுநாளெந்நாளோ (௰௨)

வெய்யபிறவிவெயில் மெப்பமெலாம்விட்டகல
வையனடிநீழலணையுநா ளெந்நாளோ (௰௩)

வாதைப்பிறவி கலைகடலைநீந்தவையன
பாதப்புணையிணையைப் பற்றுநாளெந்நாளோ (௰௪)

ஈனமில்லாமெய்ப்பொருளை யினைமையிலேகாணவெளி
ஞானமெறுமஞ்சனத்தை நான்பெறுவதெந்நாளோ

எல்லாமிறந்தவிடத் தெந்தைநிறைவாமவடிவைப்
புலலாமறபுலலிப் புணருநாளெந்நாளோ (௰௬)

சடத்துளுயிர்போலெமக்குத் தாருயிராய்ஞான
நடத்துமுறைகண்டுபணி நாமவிடுவதெந்நாளோ (௰௭

அக்கனுமாந்துன்ப விருட்கடலைவிட்டருளா
மிக்கரையேறி வெளிப்படுவதெந்நாளோ (௰௮)

முற்றுப்பெற்றது. ஆ-தாகூ

## பொருளியல்பு

தைவிளக்கினபின்னே போயககாணபார்போன்மெய்ஞ்ஞான
மெய்விளக்கின்பின்னேபோய் மெய்காண்பதென்றோ

கேடில்பசுபாசமெல்லாங் கீழ்ப்படவுந்தானேமே
லாடுஞ்சுகப்பொருளுக்க கனபுறுவதெந்நாளோ (௨)

ஆணவத்தைநீக்கியறிவுடையைவகையாய்க்
காணவத்தைக்கப்பாலைக் காணுநாளெந்நாளோ ௩]

நீக்கப்பிரியாநினைக்கமறக்கக்கூடாய்
போக்குவரவற்ற பொருளணைவதெந்நாளோ (௪)
அண்டருக்குமெய்யிலைப்பரமாரமுதையென்னகத்திற்
கண்டுகொண்டுநின்று களிக்குநாளெந்நாளோ (௫)
காட்டுந்திருவருளேகண்ணாகக்கண்டுபர
வீட்டின்பமெய்ப்பொருளை மேவுநாளெந்நாளோ (௬)
நானெனதன்மையழிவியே யெவ்வுயிர்க்குந்
தானெனவுண்மைதனைச் சாருநாளெந்நாளோ (௭)
சிந்தைமறந்துதிருவருளாய் நிற்பவர்பால்
வந்தபொருளெம்மையுந்தான் வாழ்விப்பதெந்நாளோ (௮)
எள்ளுக்குளெண்ணெய்போ லெங்குமவியாபகமா
யுள்ளவொன்றையுள்ளபடியோருநாளெந்நாளோ (௯)
அருவுருவமெல்லா மகன்றதுவயான
பொருளெமக்குவந்து புலப்படுவதெந்நாளோ (௰)
ஆரணமுகங்காண வகண்டிதாகாரபரி
பூரணம்வந்தெம்மைப்பொருந்துநாளெந்நாளோ (௰௧)
சத்தொடுசித்தாகித் தயங்கியவானந்தபரி
சுதவகண்டசிவந் தோன்றுநாளெந்நாளோ (௰௨)
எங்கெங்கும்பார்த்தாலு மினையுருவாய்நீக்கமின்றித்
தங்குந்தனிப்பொருளைச் சாருநாளெந்நாளோ (௰௩)
அடிமுடிகாட்டாதசுத்த வம்பரமாஞ்சோதி
கடுவெளிவந்தெனைக் கலக்குநாளெந்நாளோ (௰௪)
ஒன்றனையுங்காட்டா வுளத்திருளைச்சூறையிட்டு
நின்றபராஞ்சோதியுட னிறகுநாளெந்நாளோ (௰௫)
எந்தச்சமயமிசைந்துமறிவூடறிவாய்
வந்தபொருளே பொருளாவாஞ்சிப்பதெந்நாளே (௰௬)
எவ்வாறிங்குற்றுணர்ந்தார் யாவரவர்தமக்கே
யவ்வாறாய்நின்றபொருட்கன்புவைப்பதெந்நாளோ (௰௭)
பெண்ணாணலியெனவும் பேசாமலென்னறிவின்
கண்ணூடேநின்றவொன்றைக் காணுநாளெந்நாளோ (௰௮)
நினைப்புமறப்புமற நின்றபராஞ்சோதி
தலைப்புலமாவென்னறிவிற்சந்திப்பதெந்நாளோ (௰௯)

முற்றுப்பெற்றது-ஆ.கூஉ௱௰௪



# ஆனந்தவியல்பு



பேச்சுமூச்சில்லாத பேரின்பவெள்ளமுற்று
நீச்சுநிலைகாணா னிற்குநாளெந்நாளோ (௧)

சித்தந்தெளிந்தோர் தெளிவிற்றெளிவான
சுத்தசுகக்கடலுட் டோயுநாளெந்நாளோ
சிற்றின்பமுண்டுழ ' சிதையவனந்தங்கடல்போன்
முற்றின்பவெள்ளமென்மை மூழ்குநாளெந்நாளோ (௪)
எல்லையில்பேரின்பமய மெப்படியென்றோர்தமக்குஞ்
சொல்லரியாதுமாகளம்போற சொலலுநாளெந்நாளோ
அண்டரண்டகோடியனைத்து முகாந்தவெள்ளங்
கொண்டதெனபபேரின்பங் கூடுநாளெந்நாளோ (௫)
ஆதியந்தமில்லாத வாதியானதிய ஒரு
சோதியினபத்தூடே துலையுநாளெந்நாளோ (௬)
சாலோகமாதி சவுக்கியமும்விட்டகம்பான
மேலானஞானவின்ப மேவுநாளெந்நாளோ (௭)
தற்பரதத்துவளேயுஞ் சாலோகமாதியதும்
பொறபயிந்தானந்தம் பொருந்துநாளெந்நாளோ (௮)
உள்ளத்திருளோதா ஞானஞ்சிவானந்த
வெள்ளந்துளைந்து விடாயதீரவதெந்நாளோ (௯)
கன்னலுடனமுக்கனியுங் கற்கண்டுஞ்சீனியுமாய்
மனனும்பனபவாரமுதை வாயமடுப்பதெந்நாளோ (௰)
மண்ணாடுமனற மயக்கமெலலாநீங்கிடவும்
விண்ணாடெழுந்த சுகமேவுநாளெந்நாளோ (௰௧)
கானறசலமயோனற கட்டுமுலைபபொய்யதீர
வானமுதவாவிமருவுநாதெந்நாளோ (௰௨)
தீங்கரும்பெனறுங்கனி யாதினறுங்கனிப்பனபோற்
பாகுற்றுமபேரின்பம் படைக்குநாதெந்நாளோ (௰௩)
புண்ணியபாவங்கள பொருந்தாமெய்யன்பரெல்லா
நண்ணியபேரின்பசுக நாமடைவதெந்நாளோ (௰௪)

முற்றியது-ஆ-௨௨௮.



# அன்புநிலைமை

தக்கரவிகண்டசரோருகம்போலென்னிதயம்
மிக்கவருள்கண்டு விகசிப்பதெந்நாளோ (௧)
வானமுகில்கண்டமயூரபட்சிபோலவையன்
ஞானநடங்கண்டு நடிக்குநாதெந்நாளோ (௨)
சந்திரனைநாடுஞ் சகோரபட்சிபோலறிவில
வந்தபரஞ்சோதியையாம்வயசஞ்சிப்பதெந்நாளோ (௩)
சூத்திரமெய்ப்புறகத்துக் குண்டலிப்பாம்பொன்றுட்டுஞ்
சித்தனையென்கண்ணாறதெரிசிப்பதெந்நாளோ (௪)

அந்தரத்தேநின்றாடு மானந்தக்கூத்தனுக்கென்
சிந்தைதிரைகொடுத்துச் சேவிப்பதெந்நாளோ (௫)
கள்ளனிவனென்றுமெள்ளக் கைவிடுதலகாரியமோ
வள்ளலேயென்று வருந்துநாளெந்நாளோ (௬)
விண்ணுடர்காணா விமலாபரஞ்சோதி
யண்ணாவாவாவென் றரற்றுநாளெந்நாளோ (௭)
ஏதேதுசெய்தாலுமென்பணிபோநிற்பணியா
மாதேவாவென்று வருந்துநாளெந்நாளோ (௮)
பண்டுங்காணேனென பழம்பொருளேயின்றுமுனைக்
கண்டுங்காணேனெனவுங்கைகுவிப்பதெந்நாளோ (௯)
பொங்கேதமான புறக்கமெல்லாந் திரவியப
மெங்கேயெங்கேயென் றிரங்குநாளெந்நாளோ (௰)
கடலின்மடைக்கடைதுபோற கண்ணீராறாக
வுடலமெல்லாமயிர்பூசலித் துருகுநாளெந்நாளோ (௰௧)
புலர்ந்தேனமுகஞ்சருகாயப் போனேனிற்கானை
வலந்தேனென நையவி யருகுநாளெந்நாளோ (௰௨)
புண்ணீரமையாளர் புலம்புமாபோற்புலம்பிக
கண்ணீருங்கம்பலையுமாய் காட்டுநாளெந்நாளோ (௰௩)
போற்றேனென்றுமெனையைப் புரந்துசெய்யும்வேதனைகண்டு
காற்றேனுறவேனென்ன நாதறுநாளெந்நாளோ (௰௪)
பொய்முடங்கும்பூமிசெல போட்டலறப்பூங்கமலன
கைமுடங்கஞானசனகக் கட்டறுவதெந்நாளோ (௰௫)
கற்குணத்தைப்போன்றவஞ்சக காரர்களைக்கோவாம
நற்குணத்தார்கைகோத்து நான்றிரிவதெந்நாளோ ௰௬
துட்டமாமாயைச் சிழணிகயெந்தரமே
விட்டனையோவென்று வியக்குநாளெந்நாளோ (௧௭)

முற்றியது-ஆ ௲௨௱௪௫.





# அன்பர்நெறி



அத்துவாவெல்லா மடங்கச்சோதித்தபடிச்
சித்துருவாய்நின்றோர் தெளிவறிவதென்றோ (௧)
மூச்சற்றுச்சிந்தை முயற்சியற்றுமூதறிவாய்ப்
பேசசற்றோர்பெற்றவொளைப்பெறறிடுநாளெந்நாளோ
கோட்டாலையான குணமிறந்தநிற்குணத்தோர்
தேட்டாலேதேடுபொருள் சேருநாளெந்நாளோ (௩)
கெடுத்ததேயசுத்துவத்தைக கேடிலாவானந்த
மடுத்தோரடுத்தபொருட்காரவம்மைப்பதெந்நாளோ

கற்கண்டாலோடுகின்ற காக்கைபோற்பொய்ம்மாயச்
சொற்கண்டாலோடுமன்பர் தோய்வறிவதெந்நாளோ (௫)
மெய்த்தகுலங்கல்வியுடனே வேடமெல்லாமோடவிட்டுச்
சித்தரொளருஞ்சோரச் செயலறிவதெந்நாளோ (௬)
குற்றச்சபயக்குறும படர்ந்துதற்போத
மறவர்கட்கற்றபொருட் கன்புவைப்பதெந்நாளோ (௭)
தர்க்கமிட்டுப்பாழாஞ் சமயகுதர்க்கம்விட்டு
நிற்குமவர்கண்டவழி நோடெருவதெந்நாளோ (௮)
வீறியவேதாந்தமுதல் மிக்ககாலாந்தவரை
யாறுமுணர்ந்தோருணர்வுக் கன்புவைப்பதெந்நாளோ (௯)
கண்டவிடமெல்லாங் கடவுண்மயமென்றறிந்து
கொண்டநெஞ்சர்நேயரொ[illegible]கொண்டிருப்பதெந்நாளோ (௰)
பாக்கியங்களெல்லாம் பழுத்துமௌனம்பழு[illegible]த்தோர்
நோக்குந்திருக்கூத்தை நோக்குநாளெந்நாளோ (௧௧)
எவ்வுயிருந்தன்னுயிர்போ லெண்ணுந்தபோதனர்கள்
செவ்வறிவைநாடிமிகச் சிந்தைவைப்பதெந்நாளோ (௧௨)

முற்றியது - ஆ. ௩௨௫



## அறிஞருரை

இருநிலனாய்த்தீயாகி யென்றதிருப்பாட்டின்
பெருநிலையைக்கண்டினைந்து பேசருவதெந்நாளோ (௧)
அற்றவர்கட்கற்றவன்று மென்றவத்துவித
முற்றுமொழிகண்டருளின் மூழ்குநாளெந்நாளோ (௨)
தானென்னைமுன்படைத்த னென்றதவுரையை
நானென்னவுண்மைபெற்று நானுணர்வதெந்நாளோ (௩)
என்னுடையதோழனுமா மென்றதிருப்பாட்டி
னன்னெறியைக்கண்டுரிமை நாடுசெய்வதெந்நாளோ (௪)
ஆருடனேசேருமறி வென்றவவ்வுரையைத்
தேரும்படிக்கருடான் சேருநாளெந்நாளோ (௫)
உன்னிலுன்றுமென்ற வுருமொழியாலெண்ணியதயக்
தன்னிலுன்னிநன்னெறியைச் சாருநாளெந்நாளோ (௬)
நினைப்பரவேதாவினைந்தே னென்றநிலைநாடி
யனைத்துமாமப்பொருளி லாழுநாளெந்நாளோ (௭)
சென்றுசென்றேயணுவாய்த் தேய்ந்துதேய்ந்தொன்றாகி
நின்றுவிடுமென்றநெறி நிற்குநாளெந்நாளோ (௮)
ஆதியந்தமில்லா வரியபரஞ்சோதி
நீதிமொழிகண்டதுவாய் நிற்குநாளெந்நாளோ (௯)

பிறிதொன்றிலாசையின்றிப் பெற்றிருந்தேனென்ற
நெறியுடையான்சொலவினிலை நிற்குநாளெந்நாளோ (ய)
திரையற்றநீர்போற் றெளியவனத்தேர்ந்த
வுரைபற்றியுற்றங் கொடுங்குநாதெந்நாளோ (யக)
அறியர்வறிவி லவிழ்ந்தேரவென்ற
நெறியாமுறையுணர்ந்து நிற்குநாதெந்நாளோ (யஉ)
எனக்குநீயென்று மியக்கையாய்ப்பின்னு
முனக்குநானென்ற வுறுதிகொளவதெந்நாளோ (யங)
அறிவையறிவதுவே யாகுமபொருளென்
றுறுதியைசொன்னவுண்மையினை யோருநாளெந்நாளோ)

முற்றியது - ஆ-கூஉளக





# நிர்க்குநிவரை

பண்ணினிசைபோலப் பரமன்பானின்றதிர
னெண்ணியருளாகி யிருககுநாளெந்நாளோ (க)
அறிவோடறியாமை யற்றறிவினூடே
குறியிலறிவுவந்து கூடுநாதெந்நாளோ (உ)
சொலலானமனததாற் றொடராசசம்பூரணத்தி
னிலலாநிலையாய நிலைநிற்பதெந்நாளோ (ங)
செங்கதிரினமுன்மதியன் தேசடங்கிநின்றிடல்போ
லங்கணனார்தாளி லடங்குநாதெந்நாளோ (ச)
வானூட்டங்கும் வளிபோலவினைபுருவாங்
கோனூடடங்குங் குறிபடரிவதெந்நாளோ (ரு)
செப்பறியதன்கருணை சிவசுகனார்பூரணத்தி
லிப்பினிடையப்பா யணையுறதெந்நாளோ (சு)
தூயவரிவான சுகரூபசோதிகனபாற
நீயினிரும்பென்னத நிகழுநாளெந்நாளோ (எ)
நிதனையாககர்ப்பூர தீபமெனநானகண்ட
சோதியுடனொன்றித் துரிசறுவதெந்நாளோ (அ)
ஆராருங்கறுதவமபுதனார் பொற்படிக்கீழ்
நீரார்நிழல்போ னிலாவுநாளெந்நாளோ (கூ)
எட்டத்தொலையாத வெந்தைபிராசன்னிதியிற்
பட்டப்பகல்விளக்காய் பண்புறுவதெந்நாளோ (ய)
கருப்புவட்டைவாய்மடுத்துக் கண்டார்நாப்போல
விருப்புவட்டாவின்புருவை மேவுநாளெந்நாளோ (யக)
துசகபுலனார் சுழலாமற்றண்ணருளா
லுச்சிக்கதிர்படிக மொவ்வுநாளெந்நாளோ (யஉ)

ஞானநெறிதானே நடுவீடுறும்பதத்து
    ஆனமுத்திநல்குமென வன்புறுவதெந்நாளோ (௨)
பன்மார்க்கமான பலவடிபட்டேனுமொரு
    சொன்னமார்க்கங்கண்டு துலங்குநாளெந்நாளோ (௩)
அத்துவிதமென்ற வன்னியச்சொற்கண்டுணர்ந்து
    சுத்தசிவத்தை தொடருநாளெந்நாளோ (௪)
கேட்டன்முதனுள்காலே கேடிலாநற்பதமும
    வாட்டமறவெமக்கு வாய்க்குநாளெந்நாளோ (௫)
என்னதியானென்பதற வெவ்விடமுமென்றுசான்
    சன்னிதியாக்கண்டுநிட்டை சாதிப்பதெந்நாளோ (௬)
நாம்பிரமமென்று நடுவேயொன்றுண்டாமா
    றேம்பியெல்லாமொன்றாய்த்திகழுநாளெந்நாளோ (௭)
மூச்சகமேயாதி முழுதுமகண்டாகார
    சச்சிதானந்தசிவந் தானெனபதெந்நாளோ (௮)
எவ்வடிவுப்பூரணமா மெந்தையுருவென்றிசைந்த
    வவ்வடிவுகருள்ளே யடங்குநாளெந்நாளோ (௯)
சிந்தித்ததெல்லாஞ் சிவபூரணமாக
    வந்தித்துவாழ்த்தி வணங்குநாளெந்நாளோ (௰)
தாங்கியபார்விண்ணாதி தானேனானாக்கினியா
    யோங்குமிகயோகவுணர் வுறுநாளெந்நாளோ (௰௧)
ஆசனமூர்த்தங்க ளறவசண்டாகாரசிவ
    பூசைசெயவாசைபொருந்துநாளெந்நாளோ (௰௨)
அஞ்செழுத்தி னுண்மை யதுவானவப்பொருளை
    நெஞ்செழுத்தியொன்றாகி நிற்குநாளெந்நாளோ (௰௩)
அவ்வுயிரேபோலெவ்வுயிரு மானபிரானறனடிமை
    யெவ்வுயிருமெனறுபணியாஞ்செய்வதெந்நாளோ (௰௪)
தேசிகர்கோனான திறமைவுணிநந்தமக்கு
    வாசிகொடுக்க மகிழுநாளெந்நாளோ (௰௫)
குருலிங்கசங்கமமாக் கொண்டதிருமேனி
    யருண்மயமென்றன்புற்றருள்பெறுவதெந்நாளோ (௰௬)

எந்நாட்கண்ணி-முற்றியது-ஆக ௩௱௰௫,



## காண்பேனோவென் கண்ணி



சிந்திக்குந்தோறுந் தெவிட்டாவமுதேயென்
    புந்திக்குணீதான் பெருகிடவுங்காண்பேனோ (௧)
வேலைநீங்குளிட்டுத் தேம்புமுடாதின்பவெள்ளக்
    கரவலன்பாலெனறுநீ கலந்திடவுங்காண்பேனோ (௨)

உள்ளதுமில்லதுமாய- மூன்-றுணர்வதுவாயுன் -றுள்க்கண்ட
தெல்லாந்தள்ளெனச் சொல்லி யென்னையன் - என்னைத் தானாக்கிக்
கொண்டசமர்த்தைப்பார்தோழி சங்கர (அ)

பாராதிபூதநீயல்லை உன்னிப் -பாரிந்- திரியங்கரணநீயல்லைவா
ராயுணர்வுநீ யென்றான் ஐய- னன்பாயுரைத்தசொல்-லானந்தந்தோ
ழி சங்கர. (கூ)

அன்பருக்கன்பான மெய்யன் - ஐய னானந்தமோனனருட் குரு
நாதன் தன்பாதஞ் சென்னியிலவைததான-என்னைத்தானறிந்தேன்
மனந்தானிறந்தேனே சங்கர. (௰)

இறப்பும்பிறப்பும்பொருந்த-எனக்கெவ்வணம்வந்ததென்றெண்
ணியான்பார்க்கின்-மறப்புநினைப்புமாய்நின்றவஞ்சமாயமானத்தால்வ
ளர்ந்ததுதோழி சங்கர. (௰க)

மனதேகல்லாலெனக்கன்றோ- தெய்வ மௌனகுருவாகிவந்து
கைகாட்டி எனதாம்பணியறமாற்றி அவனின் னருளவெள்ளத்திருத்
திவைத்தாண்டி-சங்கர. (௰உ)

அருளாலெவையும்பாரென்றான்- அத்தையறியாதேசுட்டியென்
னறிவாலேபார்த்தேன இருளானபொருளாகண்டதல்லாறகண்ட வெ
ன்னையுங்கணடிலனென்னேடிதோழி- சங்கரா (௰ந)

என்னையுந்தன்னையும் வேறா-உள்ளத்தெண்ணாத வண்ணமிரண்
டறநிற்கச சொனனது மோவொருசொலலேஅந்தச- சொல்லால்
விளைந்தசுகத்தைசொலவேன சங்கர (௰௪)

விளையுஞ்சிவானந்தபூமி அந்த வெட்டவெளிநண்ணித் துட்டவி
ருளாங் களையகளைந்து பினபார்தேன ஐயன்களையன்றிவேறொ
ன்றுங்கணடிலனதோழி சங்கர (௰௫)

கண்டார் நகைப் புயிர்வாழ்க்கை இரு- கண்காண நீங்கவுங்கண்
டோந்துபிறா- கொண்டாற் போர் போனாலும் போகும் இதிற்கு
ணமேது நலமேது கூறாய் நீதோழிசங்கர (௰௬)

நலமேதுமறியாத வென்னை சுத்த - நாதாந்த - மோனமானாட்
டந்தத் தேசனாசலமேது மிலலாமலெலலாம் வல்லான் றுளாலென்
சலமீது தாகசிஞன்தோழி - சங்கர (௰௭)

தாக்குநல்லானந்தசோதி - அணு - தன்னிச்சிறிய வெனைத்தன்
னருளாற் - போக்குவர வத்திருக்குஞ் சுததபூரணமாகினான்- புது
மைகாண் மின்னே - சங்கரா (௰அ)

ஆக்கியளித்துத் துடைக்கும் - தொழி லத்தனைவைத்து - மென்
னத்தனையேனுந் தாக்கறநிற்கு ஞ சமர்த்தன்- உன்னசாட்சியைச்சிந்தி
க்கத் தக்கது தோழி - சங்கர (௰கூ)

சிந்தைபிறந்தது மற்கே அந்தச் - சிந்தை பிறந்துதெளிந்தது.

மாங்கே- எந்தநிலைகளுமாங்கே - கண்ட யான்றானிரண்டற்றிருந்தது மாங்கே - சங்கர (உ௰)

ஆங்கென்று மீங்கென்றுமுண்டோ- சச்சி-தானந்தசோதியகண் டவடிவாய் - ஓங்கிநிறைந்தது கண்டாற்- பின்னர் - ஒன்றென்றிரண் டென் றுரைத்திடலாமோ-சங்கர (உக)

என்றுமழியு மிக்காயம் - இத்தை யேதுக்கு மெய்யென்றிருந்தி ருலகீர் ஒன்றுமறியாதநீரோ-யம- னோலைவந்தாற்சொல்ல- வுத்தரமு ண்டோ-சங்கர (உஉ)

உண்டோ நமைப்போலவஞ்சர் - மல - மூறிந் ததும்பு முடலை மெய்யென்றுகொண்டோபிழைப்பதிங் கையோ- அருட்கோலத்தை மெய்யெனறு கொள்ளவேண்டாமோ - சங்கர (உங)

வேண்டாம் விருப்பும்வெறுப்பும்- அந்தவில்லங்கத்தாலேவி னா யுஞ்சனனம் ஆண்டா னுரைத்தபடியே சற்றுமசையா திருந்துகொள் ளறிவாகி நெஞ்சே - சங்கர (உச)

அறிவாருமில்லையோவையோ - என்னை - யாரென்றறியாதவங்க தேசத்தில் வழிதேசாமத்திவிற் சிக்கி - உள்ள - வானபொருடோற்க வோவந்தே னன்தோழி சங்கர (உரு)

வந்தவரவைமறந்து மிகக மாதர் பொன்பூமி மயக்கத்திலாழும் இந்தமய க்கத்தையறுகக - எனக - கெந்தைமெயஞானவெழிலவா ள் கொடுத்தான் - சங்கர (உசா)

வாளாருங் கண்ணியர் மோகம்யம - வாதக்கனலை வளர்க்குமெ ய்யென்றே - வேளானவனு மெய்விட்டான் - எணணின் - மிக்கோர துறக்கை விதியன்றோதோழி சங்கர (உஎ)

விதிகளும் பிரபஞ்சமெல்லாஞ் சுத்தவெயில் மஞ்சளென்னவே வேதாகமங்கள - மதிகளுமதனை மதியார் - அவாமாரக்கந் துன்மார்க் கனுசன் மார்க்கமோ மானே - சங்கர (உஅ)

துன்மார்க்கமாதர்மயககம்மனத் தூயர்க்குப்பற்றுதுசொன்னே ன்சனகன் - தனமார்ககநீதிதி ட்டாந்தம்-அவனானலநதமானசதான ந்தனன்றோ - சங்கர (உகூ)

அன்றென்று மாமென்று முண்டோ - உனக்கானந்தம்வேண்டி னறிவாகிசறறே -இன்றுநறெரியுமெனவேமறை -நீதியெம்மாதிநிச்சுழ் த்தினன்தோழி -சங்கர சங்கரசம்பு -சிவ- சங்கரசங்கர சஙகர சமபு

ஆனந்தக்களிப்பு-முற்றியது-ஆக - கூசஙக

---

# அகவல்



திருவருண்ஞானஞ் சிறந்தருள்கொழிக்குங்
குருவடிவான குறைவிலா நிறைவே

நின்றதொன்றே நின்மலவடிவே
குன்றாப்பொருளே குணப்பெருங்கடலே
ஆதியுமந்தமு மானந்தமயமாஞ்
சோதியேசத்தே தொலைவிலாமுதலே
சீர்மலிதெய்வத் திருவருளதனாற்
பார்முதலண்டப் பரப்பெலாநிறுவி
அண்டசமுதலா மெண்டருநால்வகை
எழுபிறவியிற் றெழாதோங்கும்
அலங்கயோனியி னிலம்பெறமல்க
அறுமுதலசல மாறாவாக்கையுங்
கணமுதலளவிற் கற்பகாலமுங்
கன்மப்பகுதித் தொன்மைகடோடா
இடமப்பொழுதேனுந் தமக்கெனவறிவிலா
ஏழையுயிர்த்திரள வாழுமைத்தனை
எவ்வுடலெடுத்தா ரவ்வுடல்வாழ்க்கை
இன்பமெனவே துன்பமிலையென
பிரியாவண்ண முரிமையினவாக்க
ஆதரவாக்க காதலுமமைத்திட்
டகப்பற்றியே தேகநானென
அறிவுபோலறி யாமையகத்திக்
காலமுமங்கனமமுங் கட்டுங்காட்டியே
மேலுநரகமு மேதகுசுவர்க்கமும்
மாலறவகுத்தனை யேழும்வண்ணம்
அமையாக்கதவிற சமயகோடி
அறம்பொருளாதி திறமபடுநிலையிற்
குருவாயுணர்த்தி யொருவாபோலனைவருந்
தத்தநிலையே முத்திமுடிவென
வாததாசகமும போதநூலகளும்
நிறைவிறகாட்டியே குறைவினறியங்க
அங்கங்குநின்றனை யெங்குமாகித்
சமயாதீதத் தன்மையாகி
இமையோர்முதலிய யாவருமுனிவருந்
தம்மைக்கொடுத்திட் டெம்மையாளென
ஏசறவிருக்க மாசறஞான
நலமுங்காட்டினை ஞானமிலேற்கு
நிலையுங்காட்டுதனின்னருட்கடனே

அகவல் முற்றியது - ஆக ௩௪௨





# வண்ணம்



அருவென்பதுவுமன்றி உருவென்பதுவுமன்றி
அகமும்புறமுமன்றி முறைபிறழாது
குறியுங்குணமுமன்றி நிறைவுங்குறைவுமன்றி
மறையோனெனவிளம்ப விமலமதாகி
அசலம்பெறவுயர்ந்து விபுலம்பெறவளர்ந்து
சபலஞ்சபலமென்று ளறிவிற்காண
ஞானவெளியிடை மேவுமுயிராய்

அனலொன்றிடவெரிந்து புகைமண்டிடுவதன்று
புனலொன்றிடவறிந்து மடிவிலதாதை
சருவும்பொழுதுயாந்து சலனம்படுவதன்று
சமானகொண்டறிவதனோரியல்பினதாகும்
அவனென்பதுவுமன்றி அவளென்பதுவுமன்றி
அதுவென்பதுவுமன்றி எழில்கொடுலாவும்
அருகில்லையரியாதபடியெவ (௧)

இருளென்பதுவுமன்றி ஒளியென்பதுவுமன்றி
எவையுநதனுளடங்க வொருமுதலாகும்
உளதென்பதுவுமன்றி இலதென்பதுவுமன்றி
உலகந்தொழவிருந்த வையனருதலோர்கள்
எவருங்கவலைகொண்டு சமயங்களில்விழுந்து
சுழலும்பொழுதிரங்கி அருள்செயுமாறு
கூறரியசகமாயையறவே

எனதென்பதையிகழ்ந்த அறிவின்றிரளின்று
மறிவெனவெனவிளங்கு முபயமதாக
அறியுந்தரமுமன்று பிறியுந்தரமுமன்று
அசரஞ்சரமிரண்டி னொருபடியாகி
எதுசந்ததநிறைந்த தெதுசிந்தனையிறந்த
தெதுமங்கலசபகொள சுகவடிவாகும்
யாதுபரமதை நாடியறிநீ (௨)

பருவங்குலவுகின்ற மடமங்கையர்தொடங்கு
கபடந்தனில்விழுந்துகெடுநினைவாகி
வலையின்புடைமறிந்த மறியென்றவசமுண்டு
வருணங்கிரமுமின்றி அவரிதழூறல
பருகுந்தொழிலிணங்கி யிரவும்பகலுமின்சொல்
பகரும்படிதுணிந்து குழலழகாக
மாலைவகை பலசூடியுடனே



உ

சிவமயம்.

புராணத்தின் சருக்கங்களி னுடைய

# அ ட் ட வ ணை.





ஆகபாயிரம்உள்படச்சருக்கம்௰௩.

சருக்கம்அட்டவணை

முற்றிற்று.



(சபாபதி துதி)

முதிருஞ்சுவைமதுரம்பெற மொழியுந்தமிழ்விரகன்புகழ்
பதிகம்புனைபவளைபயினர் பவபஞ்சரனமலன்கதி
குதிரும்படிபகிரண்டமுமுடையும்படியிலகும்படி
யதிரும்படிநடனம்புரி பதிருங்கழலதிருங்கழல்

(இ-ள்.) மிகுந்தமதுரரசமுண்டாகப்பாடுகின்ற திருஞானசம்பந்தமூர்த்திஸ்வாமிகளால் ஸ்தோத்திரம்பண்ணப்பட்ட பதிகமாகிய மாலையைத்தரிக்கின்றவராகியும் தம்மையடைந்தவர்கள் பிறவியைக்கெடுப்பவராகியும் மலரகிதராகியுமிருக்கின்ற சபாபதியினுடைய சூரியனுதிரவும் பிரமாண்டமுடைபடவும் விளங்குகின்றபூமியதிரவும் நடனத்தைச்செய்யாநின்ற மிகவுஞ்சப்திக்கின்றவீரகண்டையைத்தரித்தபாதத்தைவணங்குவோம்-எ-று. (இச்செய்யுளுக்குப்பயனிலைவருவிக்கப்பட்டது.) (௧)

ஸ்தலமகிமை அறுசீரடியாசிரிய விருத்தம்.

இரவிகள்சந்திரர் வயிரவர்விஞ்சைய ரிமையவ ரெண்டிசையோ
ருரகருந்தவர்முனிவர்பங்கயருவணநெடுங்கொடியோர்
பரவிநெருங்கவிலுலகநிறைந்தவர்பணியுமிடங்கிடையா
தரகரவென்பதுகடலின்முழங்கியதருணைவளம்பதியே.

(இ-ள்.) சூரியரும்சந்திரரும்வயிரவரும் வித்தியாதரரும் தேவரும் அஷ்டதிக்குப்பாலகரும் நாகலோகத்தாரும் அரியதபசிகளும் முனிவரும்பிரமாக்களும் கருடக்கொடியையுடைய விஷ்ணுக்களும் பரந்துநெருங்குதலினால் உலகநிறைந்து அவர்கள்வணங்குதற்கு இடங்கிடையாததாயவர்களாலேசொல்லப்பட்ட அரகரவென்கிறசப்தமானது சமுத்திரத்திலும் அதிகமாகமுழங்கும்வளப்பத்தையுடையது அருணாசலமென்னும்ஸ்தலமாம்-எ-று. (௨)

இளமுலைமங்கையர்முகமுநெருங்கியவிருகுழையுமகலே
யொளிவொருசந்திரனுடனிருசெங்கதிருதயமெனுந்தனியூர்
தலையவிழுந்தொடைமகபதிதன்பதிதனபதிபதியெ
மளகைவளம்பதிதனிலும்வளம்பதியருணைவளம்பதியே.

(இ-ள்.) இளமையாகிய ஸ்தனங்களையுடையபெண்கள்முகங்களும் அவர்களணிந்தஇரண்டு இரத்தினகுண்டலங்களும்பாசிலே பிரகாசிக்கின்றதுசந்திரனுடனே இரண்டுசூரியருதயமானார்களென்றுசொல்லும்படியாகியதுப்பற்றலூர்முறுக்கவிழ்ந்த கற்பகமாலையைத் தரித்த தேவேந்திரனுடைய பட்டணமாகிய அமராவதியையும்குபேரனுடைய நகரமாகிய அளகாபுரியைப்பார்க்கிலும்வளத்தையுடையது அருணாசலமென்னும்ஸ்தலமாம்-எ-று. (௩)

## பாயிரம்.

காலனைநிர்த்திடமார்பிலுதைத்தவர் காமனுருப்பொடியா
நாலமிடற்றினர் மாலைமதிக்குறையாடரவப்பணியா
ராலுமுகத்தவன் ஞானமளிப்பவனுமைசற்கரியார்
சூலமெடுப்பவர் மேவு திருப்பதி சோணகிரிப்பதியே.

(இ-ள்.) யமனை நிர்த்தமார்பி லுதைத்தவராகியும் மன்மதனுடைய தேகத்தைப்பொடியாகச் செய்தவராகியும் விஷத்தைக்கண்டத்திலதரித்தவராகியும் மூன்றாம்பிறையை மாலையாகத்தரித்தவராகியும் ஆதிசேஷனாகிய சர்ப்பத்தை ஆபரணமாகப்பூண்டவராகியும் பிரம்மாவிஷ்ணுவுக்குந் தெரியவரியவராகியும் சூலத்தையேந்தியவராகியும் விளங்குகின்ற பரமசிவன் வாசஞ்செய்கின்ற அழகாகியபதி அருணாசலமென்னுந்தலமாம்.எ-று.

### சந்தக்கலிவிருத்தம்-பரமசிவவணக்கம்

உறவொடுபகையறு மொருமுதலெவனெவ
னிருவினையுலகரு ளிறையவனெவனெவன்
மறைமுடிவினிடம்வளர்பவனெவனெவ
னறிவினிலறிபவ னடியிணைதொழுவாம்,

(இ-ள்.) உறவும்பகையுமில்லாததனிப்பற்றாயுள்ளதன்மையானவனெவன் சர்வசங்காரமானபின்பு உலகத்தைஉண்டாக்குகிறவனெவன் வேதமுடிவிலேசகலத்தையுமறிகிறவனெவன் அப்படிப்பட்டதன்மையையுடையசிவனது திருவடிகளையாம் வணங்கினோம் எ-று. (ரு)

### கலிநிலைத்துறை-அருணாசலகாதை.

மணிகொண்டநெடுங்கடலில்விழிவளருந்திருமாலுமறையினோனும்
பணிகொண்டபாதலத்தும்பூதலத்துமீதலத்துமபரிந்துதேட
வணிகொண்டபிரமாண்டகோளகைபொற்கோளகையாயழகுகாட்டக்
கனிகொண்டவொருவரையாமொருவரையாமகலாதகருத்துட்சேர்ப்பாம்

(இ-ள்) இரத்தினங்க ளிருப்பிடமாகிய நீண்டகடலில் நித்திரை செய்கின்றவிஷ்ணுவும்பிரம்மாவும நாகங்கள்வாசஞ்செய்கின்ற பாதாளத்திலும்பூமியிலும் மேலுலகத்திலும்வருந்தித்தேட அவர்களால்காணப்படாமல் அழகாகிய பிரமாண்டகோளகையானது பொன்னாற்செய்யப்பட்ட கோளகைபோல அழகுகாண்பிக்கும்படி ஒப்பற்ற அக்கினிமலையாகிய பரமசிவத்தை நீங்காது இருதயத்திற் சேர்த்துக்கொள்வோம்-எ-று, (சு)

ஒருமானைக்கரத்தினில்வைத் தொருமானைச்சிரத்தினில்வைத்தொருவ
ரேழுமருமானையிடத்தினில்வைத்தருள்வானைப்பவளவெற்பிஞ்சயிலம்
போல, வருமானைமுகத்தானையளித்தானைப் பொருமானையகிழவேறும்
பெருமானையருணகிரிப் பெம்மானையடிபணிந்து பிறவிதீர்ப்பாம்,

டைந்தவர்களைப் பிழைப்பிக்கச்செய்ய வடவீதியிலே வாசஞ்செய்கிற மயில்வாகனக்கடவுளும் தறியிற்கட்டப்பட்ட மதம்பொருந்திய ஐராவதத்திலேறுகின்ற தேவேந்திரனுக்குத்தெய்வலோகத்தையுங்கற்பகவிருட்சத்தினிழலையும் கொடுத்தவரும கடப்பமாலையைத் தரித்தவருமாகிய சுப்பிரமணியக்கடவுளை வணங்குகிற அடியார்களுடைய பாதங்களைத் தலைமேல்வைத்துக் கொள்வோம்-என்றவாறு. (ய)

(சைவசமயாசாரியர்கள் துதி.)

வாதுகொண்டபாசமய கோளரியையடிவணங்கி வன்கற்றூணற் றீதுகொண்டகருங்கடலைக் கடந்தசெழுந் தமிழ்க்கடலின் றிருத்தாள் போற்றி, காதுகொண்ட விழிப்பாவை திருமனைக்கெம் பெருமானைக் கால்கோளுவத், தூதுகொண்டசுந்தரனைததம்பிரான்றன்றோழனையாந் துதிசெய்வோமே.

(இ-ள்.)வாதுகொண்டுஜெயிக்கவந்தசமணர்களாகியயானைகளுக்குச் சிங்கமாகிய திருஞானசம்பந்தமூர்த்தி ஸ்வாமிகளது பாதத்தைவணங்கி வலியகருங்கல்லோடு சேர்த்துக்கட்டிச் சமணர்கள் சமுத்திரத்திற்போட அக்கல்லினாலேதானே அச்சமுத்திரத்தைக்கடந்த செந்தமிழ்க்கடலென்று சொல்லப்பட்ட அப்பாசுவாமிகளதுபாதத்தைவணங்கி காதளவுந்தாவிய கண்களையுடைய பரவைநாச்சியாருடைய திருமனைக்கு இரண்டுபாதங்களுமநோக நடந்தாண்டவரைத் தூதாகவுடைப்பியதம்பிரான்றோழராகிய சுந்தரமூர்த்திசுவாமிகளைவணங்குவோம்.

(தரவு-கொச்சகக் கலிப்பா.) (எ-று.

அத்தனூர் பெருந்துறைபுக் கரியவினைக்கடல்கடந்து
புத்தனூர் மதங்கடிந்து புனிதமாகியசிவன்
முத்தனூர் மாணிக்க வாசகனூர்முத்திக்கு
வித்தனூர் வாதவூர் வித்தகாதாள்போற்றி.

(இ-ள்.) பரமசிவன்குருமூர்த்தமாக எழுந்தருளி யிருந்த திருப்பெருந்துறைக்குப்போய் அச்சாமியினுடைய அனுக்கிரகம்பெற்று அரிதாகிய தீவினைக்கடலைத்தாண்டி அநதக்காலததில் வியாபித்திருந்தபவுத்தாகளுடைய மதத்தைக்கண்டனஞ்செய்து பரிசுத்தமாகியசிவன் முத்தியைபடைந்தவரும் அம்முத்தியாகிய நிலத்திற்கு விரையாகியும திருவாதவூரிற்பிறந்த ஞானசொரூபராகியுமிருக்கின்ற மாணிக்க வாசகசுவாமிகளுடைய பாதத்தைவணங்குவாம்-எ-று. (யஉ)

(திருத்தொண்டர்கள்துதி.)

அறுசீரடியாசிரியவிருத்தம். (ய

மனையாளையாற்களித்துமணங்களித்தவியற்பகையார்மலர்த்தாள்போற்றி
தனையாரும்பெருமானுக செச்சிலிடுங்கண்ணப்பர் சரணம்போற்றி
வினையாளரறியாத திருநீலகண்டாடி விரும்பிப்போற்றி
எனையாளுமிளையானறன் குடிமாறனாரிணையடியை யிறைஞ்சுவேமே.

(இ-ள்.) பரமசிவன் அடியார்வேடம்பூண்டுவந்துபெண்சாதியை யெனக்குக்கொடுத்துவிடென்றுகேட்க அதற்காக அதிகசந்தோஷத்தையடைந்து சுவாமிகளுக்குத்தன்மனையாளைக்கொடுத்தது அதனால் அதிகமகிழ்ச்சிபொருந்திய இயற்பகைநாயனாருடைய மலர்போன்றபாதங்களைவணங்கி தன்னையாட்கொண்ட சுவாமிக்குத் தான்தின்று ருசிபார்த்தஎச்சிலைக்கொடுத்த கண்ணப்பசுவாமிகளது பாதத்தைவணங்கி வினையையுடையவர்களறியாத திருநீலகண்டநாயனாருடையபாதத்தை மகிழ்ந்துவணங்கி அடியேனையாட்கொண்டருளும் இளையான்குடிமாறநாயனாருடைய பாதத்தைவணங்குவேன்-எ-று. (௰௩)

ஐயடிகள்காடவர்கோ னீரடியைவணங்கிமகவறுத்தெம்மாற்கு, செய்ய
டிசிலுடன்படைத்தார் திருவடியைத்தொழுதிறை நீறணிசேரமான்,
மெய்யடியைப்புகழ்ந்துதெய்வவுலாச்சொன்னசேரனடிவிரும்பியேத்தி
ப்,பொய்யடிமையில்லாத புலவர்முதலனைவரையும் போற்றுவோமே.

(இ-ள்) ஐயடிகள்காடவர்கோனாயனாரது இரண்டுபாதத்தையும் வணங்கி எமதுசுவாமிகளுக்குப்பிள்ளையை அறுத்துச்சமைத்தகறியை மெய்விட்ட அன்னத்துடனேபடைத்த சிறுத்தொண்டநாயனாருடைய மெய்மையாகிய பாதத்தைவந்தித்துத் தெய்வீகம்பொருந்திய உலாப்பிரபந்தம்பாடிய சேரமான்பெருமாணாயனாருடையபாதத்தை பூசையுமாறுப்பணிந்து மெய்யடிமையையுடைய புலவர்கள்முதலாகிய சகலரையும் வணங்குவோம்-எ-று. (௰௪)

(நந்திகேசுரர்-துர்க்கை-கௌதமர்-சண்டேசுரர் துதி.)

நந்திதிருவடியிறைஞ்சி விந்தையடிபுகழ்ந்துமறை நான்கிற்கைந்தாய்
வந்தருளுங்கௌதமனார் மலரடியென்முடிக்குமுடி மாலையாக்கித்
தந்தைவிருபதஞ் சிதைத்துச்சிதையாதபதத்திருந்த தண்டிதாளைச்
சிந்தையிலைசக்குடியிருத்தியருணகிரிநினைபவர்தாள்சென்னிசேர்ப்பாம்

(இ-ள்.) நந்திகேசுரருடைய அழகியபாதங்களைத் தொழுதுதுர்க்காதேவியினுடைய பாதத்தைவணங்கி நான்குவேதத்தினின்றும் ஐந்தாம்வேதசொரூபமென்றுசொல்லப்பட்ட கௌதமருடைய தாமரைபோன்றபாதத்தை என்சிரசுக்குத்தரிக்கப்பட்ட மாலையாகச்செய்துதம்முடைய தகப்பனாரதுஇரண்டுபாதங்களையும்வெட்டி அதனால்கெடாத மோட்சபதத்திலிருந்தசண்டேசுரருடைய பாதத்தை இருதயத்திற்குடியிருக்கச்செய்து அருணாசலஸ்தலத்தை நினைப்பவருடையபாதத்தைச்சிரசிற்சேர்த்துக்கொள்ளுவோம்-எ-று. (௰௫)

(அவையடக்கம்.)

தேறுகின்றகலைகலையுந் தெளிந்தசுவையிருநான்குந் திகழும்பாடல்
கூறுகின்றபுலவர்முன்னே தமியேனுஞ்சிலபுகல்சொற் குறித்தவாறு
வீறுகின்றமறைவிரிஞ்சனேறிவருமனத்திரளான்றுவிரிஞ்சன்றனை
யேறுகின்றகருடன்முன்னுமொருமசகம்பறவையெனவிரிதல்போலு

(இ-ள்.) பலநூல்களையுங் குறைவறக்கற்றுஎட்டுச்சுவையும்பொருந்திய தமிழ்ப்பாடல்களைச்சொல்லுகின்றவித்துவான்கள்முன்னேஒன்றுமறியாதயானுஞ்சிலபாடல்களைப்பாடநினைத்ததுவிதம் விளங்கியநாலுவேதங்களையுடைய பிரமனானவனேறி நடத்தும் அன்னவாகனத்தின்முன்னும் அவன்தகப்பனாகிய விஷ்ணு ஏறும்படியானகருடன்முன்னும ஒருசிறியகொசுதானுமொரு பறவையெனப்பறத்தல்போலும் -எ-று. (௰௭)

நீரிருக்குதெனப்பழிததுவிடுவரோவதுபாலினிகழுமானல்
நாரிருக்குதெனக்கழித்து விடுவரோவதுமலரினண்ணுமாறு
லாரிருக்குஞ்சடைமுடியார் விடமிருக்குந் திருமிடற்று ரருணைநாதர்
பேரிருக்குந்தகைமையினலெனதுரையையிகழுவரோபெருமையோரே

(இ-ள்.) பாலொடுகலந்திருக்கின்ற நீரைச்சகவாசயோக்கியததால்தள்ளாமலெடுத்துக்கொள்ளுவார்கள்புஷ்பமாலையோடுசேர்ந்தநாரையும் அப்படியேகொள்ளுவார்கள் ஆததிமாலையைச் சூடிய சடைமுடியையும ஆலகாலமிருக்குங் கண்டத்தையுமுடைய அருணாசலேசுரநாமமிருக்கிற பெருமையினலே என்னாற்செய்யப்பட்ட புன்பாடலையும் பெரியோர்கள ஒப்புககொள்வார்களேயன்றி யிகழார்கள்-எ-று.

அழகுதாக்கனிந்தாச்சமாம்பழையதெனினுமதிலமுதுண்டாமோ
விழைவுதருசுவைக்கரும்புபுதியதுவேயெனினுமதன்விரதம்போமே
இதிவுறுபாடலுமுயாவு தங்கியசெய்யுளுமவைபோ லிருககுமாகில்
பழமையெனநலந்தருமோ புதுமையென விகழ்படுமோ பயன்கொள்வார்க்கே.

(இ-ள்.) அழகியசிவப்புநிறம்பொருந்தப் பழம்பழுததஎட்டிமாம்வெகுநாளையமாமாயிருநதபோதிலும் அதில்மாதுரியமுண்டாகாது சர்வதாரளும் இரசிககப்பட்ட இனிதாகியகருப்பு கொஞ்சநாளையதாயிருநதாலுமஅதில்கசப்புஉண்டாகாது அப்படிபோல் குறறதோஷங்கூடியசெயயுள் பழமையாயிருநததினலே ஒருநன்மையைக கொடுக்காதுயாதொருதோஷமுமில்லாமல் உயர்வுபொருந்தியபாடல் சிலநாளைக்குமுன் னுண்டாயிருந்ததினலேயே இகழப்படாது பிரயோசனத்தைககொள்வோர்களுக்கு-எ-று. (௰௮)

இனையளாவுந்தமிழ்மிடியிற் றகிமதாம்பிறந்தகல்வித் திறமையோருங்
கினையுமியற்சுவையறியாமூடர்பருடைவறிவின்முன்னே நிற்கலாமோ
வினையடருங்குவளைவிழியனிச்சமலரணையதிருமேனிமானோ (கிடாரே
புனைவின்மதமலர்கணையைப் பொறுப்பதல்லாலமரினைப்புபொறுத்

எட்டுஞ்சுவையாவன-சிங்காரம்-வீரம்-பெருநகை-கருணை-ரௌத்திரம்-குப்சை-அற்புதம-பயம்.

மூர்த்தியவனுற்றதுயர் யாவையுமொழிந்து
வந்தவரவேதெனவ வருததுரைசெய்கின்றார்.

(இ-ள்) சருவசங்காரகாலம்வந்ததென்று சொல்லும்படி இருவருஞ்சண்டைசெய்யும்போது அந்தவேளையில்தேவர்களெல்லாம் பயப்பட்டுத் தேவேந்திரனிடத்திற்போய்ச்சேர்ந்து தங்களுடையதுக்கத்தைச்சொல்லுகிறதற்குமுன்னேதேவேந்திரன் தானபட்ட துன்பங்களெல்லாஞ்சொல்லியபின்பு நீங்கள்வந்தகாரியம் ஏதென்றுகேட்கத் தேவர்கள்சொல்லுவார்கள்—எ-று. (௬௪)

ஆரணனுநாரணனு மானவிருவோருந்
தாரணியிலேமிகு சமர்தொழில்விளைத்தா
ரோணியமவேறுகதி யில்லையெவருக்கும
காரணனையேதொழுதல் காரியமிதென்றார்.

(இ-ள்) பிரம்மா விஷ்ணுவுமாகிய இருவரும் பூமியில்மிகுந்தயுத்தத்தைச்செய்கிறார்கள் எங்களுக்குப் பிழைக்கத்தகுந்தமார்க்கம வேறேயில்லை எல்லாருக்குங் காரணமாயிருக்கிற பரமசிவனைததொழுது இந்தச்செயதியைசசொல்வதேகாரியமென்றுசொன்னார்கள தேவாகள

நாயகனிசைந்துபினர் நாகவுலகத்தோர்
ஆயமலாபோலடி துதித்தரிவைபாகா
மாயமுடன்மாலயன் வருததமதுதீராய்
தாயலதுமைந்தர்துணை தாரணியிலுண்டோ.

(இ-ள்) இப்படிச்சொல்லத்தேவேந்திரனும் சம்மதித்துப்பின்பு அவனோடு தேவாகளெல்லோருமபோயச் சிவனுடைய பரிசுத்தமாகிய தாமரைமலாபோன்ற பாதத்தைததொழுது மங்கைபாகனே ஞ சகங்கொண்டு விஷ்ணுவும பிரமாவும சண்டைசெய்வதனால் வருந்துக்கததைததீாககவேண்டும பிளளைகளுக்குத்தாயேதுணையல்லாமல் மற்றொருதுணை பூமியிலுண்டோவென்று சொன்னார்களதேவர்கள—எ (

உருப்படுசகட்டைநிக ருற்றுலகின்மீதே
யிருட்படுபிறப்பினை யிறப்பினையுறாதே
பொருட்பெறவுனக்கடிமை புககளவிலாவுன்
னருட்கடல்குளித்திட வடைக்கலமதானோம.

(இ-ள்) உருண்டுகொண்டுபோகாநின்றவண்டியினுடையசக்கரம்போல அஞ்ஞானம்பொருந்திய பிறப்பையுமிறப்பையு மாறிமாறி யடைந்து வருத்தத்தை யனுபவியாமல் மோட்சத்தைப்பெற உனக்கடிமையாகப்புகுந்து உன்னுடைய அளவில்லாத கிருபைக்கடலில் குளிக்க அடைக்கலமானோமென்றாகள் தேவாகள—எ-று. (௬௭)

புழுக்குடையுடம்மை பொறுக்கமுடியாக
விழுக்குடையனிச்சைகெட விச்சையருள்வோனே

முழுக்கடலிடத்தின் முழுக்களுமெமாறு
வழுக்கமலமற்றிட வண்டகலமதானோம்.

(இ-ள்) அநேகம்புழுக்கள் குடைந்துக்கொண்டிராநின்ற உடற்பாரத்தைத்தப்பொறுக்கமுடியாத இழுக்காகிய அஞ்ஞானங்கெடப்பிரியத்தினாலே கிருபைசெய்கின்றசுவாமியே பெரியசமுத்திரத்தினிடத்தில் தினம்முழுகினாலும் போகாதமும்மலமாகிய அழுக்கற்றுப்போக அண்டக்கலமாயுமமைசேர்ந்தோமென்றார்கள் தேவர்கள்-எ-று. (௩௮)

எண்ணமினிவேறிலை யெமக்கருள்செய்யென்றே
கண்ணுதலைவிண்ணவர்கள் கற்றுமொழிபோதி
லண்ணலுமுணர்ந்தனனைத்துயிரினுள்ளே
யெண்ணையெனநிற்குமவ னீதறிகிலானோ.

(இ-ள்.) இனிமேல்வேறேஆலோசனையில்லை எங்களுக்கு கிருபைசெய்யுமென்று சிவனைதேவர்களபுகழ்ந்து ஸ்தோத்திரஞ்செய்யும்போதில் சுவாமியும அவ்விருவருக்கும் வந்தசண்டையின்மூலத்தை யறிந்தார் எல்லாவுயிர்களிடத்திலும எள்ளினிடத்து எண்ணெயைபோல்நிற்கும சுவாமி இது அறியமாட்டாரோ அறிவார்—எ-று. (௩௯)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நடுக்கமுறுமுனிவரோடமரரெலாம்பயந்துவிர நாகமீது
படுக்கைபுரிதிருமாலும் பங்கயத்திருந்துமயனும்பகைமைதீர
வடுக்கடுக்கிமபுவனமெலா மடுக்கழியாதிருக்கமனத் தருள்வதாகி
தடுக்கரியதழலுருவத தொருவகையாயிருவரையுந் தடுப்பதானான்.

(இ-ள்) நடுக்கமடைந்தமுனிவர்கள் தேவர்களெல்லாரும் பயத்தைநீங்கும்படி சர்ப்பசயனத்தில் நித்திரைசெய்கின்றவிஷ்ணுவும்தாமரைப்புஷ்பத்தில்வீற்றிருக்கின்றபிர்மாவும் ஒருவருக்கொருவர் பகைமையைநீங்கவும் அடுக்கடுக்காயிருக்கும் அண்டங்களெல்லாம அடுக்குக்குலையாமலிருக்கும் கிருபைசெய்வதற்காக தடுத்தற்கரிய அக்கினிசொருபத்தோடுகூடிய ஒருமலையாகி இத்தயிருவரையுந் தடுக்கும்படி எழுந்தருளினார் பரமசிவம்—எ-று. (௪௰)

பாதலத்திற்பணிகளெல்லா விழுநாகலத்தன்கீழ்ற் பருவேரோடிப்
பூதலத்திற்கிளைத்திமையோ ருலகெல்லாமலர்ந்துமலப் புண்டரீகன்
மீதலத்துமுகடுடைத்துக கடாகவெளிகடந்துபெரு வெளிக்குமேலா
மாதலத்துக்கிதுவுமொரு கனன்மேருவடுத்ததென வளர்ந்தமாதோ.

(இ-ள்.) பாதாளலோகத்திலிருக்கிறபாம்புகளெல்லாம்அந்தமலைக்குச்சல்லிவேராகவும் அதன்கீழ்ப்பருத்தவேரோடி பூமியிற்பெரிதாய் கிளைத்துக் தேவலோகங்களெல்லாந்தாண்டிப் பிர்மலோகத்துமுகட்டையுடைத்து அண்டகடாகவெளியைக்கடந்து அதற்குஅப்பாலிருக்கிற பெரியவெளிக்கு மேலாயிருக்கிற இடத்துக்கும் அக்கினிசொரூபமாகிய மகாமேருஅடுத்ததென்றுசொல்லவளர்ந்தது—எ-று. (௪௧)

முளைக்குநெடுஞ்சுடரிரவி புரவியுலவாவுலகமுழுதுமோடிக், களைக்குமணியிருளகற்றவேற்றிவைத்த விளக்கெனவே கிளர்கங்குபாலே யளக்கரெலாமளப்பரிய வளவையழல்பரந்ததென வரத்தமானந், திளைக்குமெழுதிரிகளெல்லா மதுசொரிந்தசிறுபொறிபோற் சிவந்தமாதோ.

(இ-ள்.) உதயமாகின்ற நெடுந்தூரம் கிரணங்களை வீசுகின்ற சூரியனுடைய தேரிற்கட்டிய குதிரைகள் சஞ்சாரஞ்செய்யக்கூடாத உலகமெல்லாம் ஓடிக்களைத்தல் நீலமணிபோலுங்கரிய இருளையோட்டுகிறதற்கு ஏற்றிவைத்த விளக்குப்போலப் பிரகாசிப்பதனாலே சமுத்திரமெல்லாம் சொல்லுதற்கரிய வடவாமுகாக்கினி பரந்ததுபோலச் சிவப்புநிறத்தைப்பொருந்த சத்தகுலபர்வதங்களெல்லாம் அந்தப் பிரகாசத்தினாலே அந்த அக்கினிமலைசொரிந்த அக்கினிப்பொறிகள்போலச் சிவந்தனகள்-என்றவாறு. மாது ஓ அசைகள். (சஉ)

கலிவிருத்தம்.

வானக்கண்ணழலாளது கண்டமலரோனுங்
கானக்கண்ணனுமஞ்சியகன்றார்கள்காணா
ஞானக்கண்ணினர் காணுமதல்லனவைசேரு
மீனக்கண்ணினருக்கெளியானோவெம்மானே.

(இ-ள்.) இப்படிஆகாசபரியந்தம் அக்கினிசொரூபத்தைக்கண்ட பிரமாவும் வேணுநாதத்தைச்செய்கின்ற கிருஷ்ணனாகிய விஷ்ணுவும் பயப்பட்டு ஒதுங்கினார்கள் ஞானக்கண்ணையுடையவர்கள் காணுவதல்லவல் குற்றம்பொருந்திய ஈனமாகியமுகற்றிற் கண்ணுடையவர்காணுகிறதற்கு எளியவனோ நம்முடையபரமசிவன்—எ-று. ( )

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கண்ணிலளவிடவரிய சுடரினைக்கண்டிருவருமாய்க் கலங்கியன்றோ, ரெண்ணிலிதனடிமுடியை யறிபவரேபெரியவரென் றிரைந்தாரிந்த, மண்ணினடியறிவனெனப் பணிவிடையிற்றூக்கமிகக்கோன்வராகமானான். விண்ணின்முடியறிவனென வடிவெகினமெடுத்தயனும் விரைந்துபோனான்.

(இ-ள்.) கண்களாலே இவ்வளவுதூரம் இந்த மலைபோலிருக்கிறதென்று அறியக்கூடாத பிரகாசமான மலையைப்பார்த்து இரண்டுபேருந்துன்பத்தையுடையவராய் இந்தமலையினது அடியையாவது முடியையாவது அறிகிறவரே பெரியவரென்று ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டார்கள் அப்பொழுது சாப்பத்தில்நித்திரைசெய்கிறவராகிய விஷ்ணு இந்தமலையினடியை நானறிந்துவருகிறேனென்று வராகரூபமானார் இந்தமலையின் சிகரத்தைக்காணுகிறேனென்று பிரமாவும் அன்னபட்சியாகி ஆகாயத்திற்பறந்தார்—எ-று. (சச)

மொத்துமரைக்கணத்தினுக்காயிரங்காதம்பறந்தயனுர்விரைந்துபோனார், அத்தியாலெடுத்தபுவி கணத்தினுக்காயிரங்காதந் துளைத்துபோனார், பத்தரைகையோர்செயலுமைசகிறகணசமணிகெடும்பூட்டுங்கருகிலோடு, நித்திலமொக்குண்டிகையுநீலமணிக்குன்றனைய நிகாத்தமாதோ.

(இ-ள்.) சொல்லப்பட்ட அரைக்ஷணத்திற்பிரமா ஆயிரங்காதவழி பறந்துமேலாகப்போனார் படத்தையுடைய ஆதிசேஷன் சுமந்தபூமியை அரைநொடியிலே ஆயிரங்காததூரம் துளைத்துக்கொண்டு விஷ்ணுகீழாகப்போனார் அதுஎப்படியிருந்ததெனறால் அந்தமலைதங்கமயமாகையால் ராட்டணப்பூட்டைப்போலவும் அதில்இறைக்கிறதற்குக்கட்டிவிட்டிருக்கின்ற நீலரத்தினத்தோண்டிபோலவும் முத்துகளிழைத்திருக்கிற அழகியதோண்டிபோலவுமிருந்தது—எ-று. (௬௫)

பூவுலகையரியகன்று கீழுலகின்முறைமுறையே புகுந்துபோந்து
காவலுறுமாவலிதன்போகவதி யெனும்புரமுங் கடந்துமேவித்
தேவர்தொழும்பரஞ்சுடர்வாழாடகேசுரங்கரத்துஞ் சிரத்தும்போற்றி
மூவுலகமுதலளந்தோனேழுலகமளந்துமதன்முடிவுகாணான்.

(இ-ள்.) வராக அவதாரமெடுத்து விஷ்ணுவானவர்பூலோகத்தைக்கடந்து அதின்கீழிருக்கின்ற ஏழுலகங்களையு முறைமுறையேதுளைத்துக்கடந்துபோய் மாவலிச்சக்கிரவர்த்திக்காவலின்மேலிருக்கிற போகவதிப்பட்டணத்தைத்தாண்டி அப்புறம்தேவர்களவணக்கும் பிரமசொரூபம்விளங்காநின்ற ஆடகேசுரத்தைக்கண்டு கைகளினாலும் சிரசினாலும்வணங்கி முன்னேமூன்றுலகத்தையுமளந்தவ இப்போதேழுலகங்களை அளந்தும் அந்தமலையினடியைக்காணமற்போனார்—எ-று. (௬௬)

வளர்ப்புடையபிறைபோல வளர்மருப்புந் தேய்பிறைபோல்மழுங்கிப்போகக், குளப்படியுமுகநுனியும் பிணைத்தேமாசையைப்போற் குறைந்துபோக, வளப்பரியதுயரிலே விழுந் தொருநூறுண்டொழிந்த தமனியனைவாழ்த்தி, யிளைப்பதுவுஞ்சலிப்பதுமற் றெழுதலமுமிடர்க்கடலுமேறினானே.

(இ-ள்.) அப்படிமகாவிஷ்ணுவராகரூபங்கொண்டு தேடுகிறபோது வளர்பிறைபோல நாளுக்குநாள்வளர்ச்சியுற்ற இரண்டுகொம்புகளும் தேய்பிறைபோல்குறைந்து மழுங்கிப்போகவும், குளம்புகளும், முகத்தினுனியும்-தேய்மானைப்போல் எப்படிகுறைந்துபோயிற்றோ அப்படித்தேய்ந்துகுறைய எண்ணக்கூடாததுக்கசமுத்திரத்தில்விழுந்து நூறுவருஷகாலந்தேடியுங்காணமல் பின்பு தெளிவுவந்து இது சிவனுடைய செயலென்றறிந்து அவமானத்தியானஞ்செய்து இளைப்புஞ்சலிப்புமகன்ற தன்னுடையதுக்கசமுத்திரத்தையும், ஏழுலகத்தையுந் தாண்டிவந்தார்-எ-று. (௬௭)

தமபோராமுதற்றவிர்க்கத் தழற்பிறப்பாதவந்தத்தலத்தைச் சார்ந்தா,னம்போதனிதன்முடியினளவறியானெனமனத்திலையந்தீர்ந்தா, னமரோருக்கரியானைச் சேடனேந்தனதுவிழிநயனத்தோடே, யம்போதைப்புனைவானைப்பலகாலும்பணிந்துருகிப் பாவினின்றான்.

(இ-ள்.) தனக்கும்பிரமாவுக்கும் வந்தகலகத்தை நீக்கும்படிக்கு அக்கினிசொரூபமாகஎழுந்ததலத்தைச்சேர்ந்து அழகியதாமரைப்பூவிலிருக்கிறபிரமா இந்தமலையின்முடியை அறியமாட்டானென்றுநிச்சி

ஞ்செய்துக்கொண்டு சம்பாதமனுஷர்களுக்கு அரியவனாயெப்படிப்பட்
டவர்களுக்கு மாமாகயிருக்கிறவனைத தம்முடைய கண்ணாகியபுஷ்ப
த்தோடு அழகியபுஷ்பங்களைத் தரிககானின்றவனைப்பலதரமும் வந்த
னஞ்செய்து உள்ளமுருகிப்பாவினு விஷ்ணு—எ-று. (௪௮)

கலிவிருத்தம்.

இன்னதாமியன்செய விருக்கவிங்கிதன்
முன்னமேயழற்கிரி முடியையதேடவே
யன்னமாய்ப்பறந்தவ னக்கணத்திலே
மன்னுமோராயிரக் காதம்வாவினுன்.

(இ-ள்.) இந்தப்பிரகாரம் இந்தவிஷ்ணுவிருக்க இதற்குமுன்னே
அக்கினிமலையின்முடியையதேட அன்னபட்சியாகிப் பறந்தபிரமா
அந்தக்ஷணத்திலே ஆயிரங்காதவழியாகத்தாண்டினு—எ-று. (௪௯)

கிரியேயண்ட கோளகையுங்கீழுற
வேறிநூறுயிர மாண்டுமேவினு
னூறுநூறுயிரக காதநோக்கினு
மீறிலா திருத்தவ் வெறியி ஞாணமே.

(இ-ள்) அண்டகோளகையுங்கிழிப்பட கிழித்துப்பறந்து நூறுயி
ரம்வருஷந்தேடினர் அப்படிஅநேகநூறுயிரங்க தந்தாண்டிப்போயப்
பாரத்தலும்முதலபாரத்ததுபோலவேயிருந்தது அக்கினிரதாண்-எ-.)

சிறையெலாமுதிர்ந்தன விசையுந்தீர்ந்தன
நிறைவத மிகக்கணு முயிர்ப்புநீண்டன
குறையெலாம்வளர்ந்திட தனிமைகூர்தலான்
மறையினுனிவையினை மனதிலெண்ணினுன்.

(இ-ள்.) அப்படிபிரமா அன்னமாய்ப்பறந்துபோகிறபோது சிற
கெல்லாமுதிர்ந்துபோயின விசையும் அடங்கி குறைவில்லாத துக்கமு
ம்பெருமூச்சும்அதிகப்பட்டன மனக்குறை வளர ஒருவருமில்லாமல்தா
ன் ஒருவனானபடியினுலே பிரமாசிலதை மனதிலெண்ணினுர்—எ-று.

அரியமாலிதனடி யறிந்துமீளுமோ
தெரிவருமிடையிலே திரும்புமோவென
வரியதாகியதுய ருஞ்சலாடினு
னெரியுறுமெழுகுபோ லிளகுஞ்சிந்தையான்.

(இ-ள்) அரியமகாவிஷ்ணு இந்தஅக்கினிமலையினுடைய அடியை
அறிந்துதிரும்புவானே கொஞ்சத்தூரந்தேடி இனிமேல் தேடக்கூடா
தென்றுதிரும்பிவருவானே என்கிறதுக்கமாகிய ஊஞ்சலிலிருந்தாடி
னர், நெருப்பிலேயிட்டமெழுகுபோல யிளகிய மனதையுடையவராகி
பிரமதேவர்—எ-று. (௫௨)

மற்றிதுசிவனென மனதிலெண்ணிலே
னுற்றிதன்னையு முறவுகொண்டிலே
னிற்றைநாளவனாகருமிவ் விடாகருழ்ந்தினேன்
சிற்றறிவுடைமையோ செய்ததீமையோ

இ-ள். இந்தமலையைச்சிவனென்று அறியாமற்போனேன் பகைத்துக்கொள்ளப்பட்ட விஷ்ணுவையாவது உறவுகொள்ளாமற்போனேனே அன்றுமுதலின்றையவரைக்கும்வெகுகாலமாய்த்துக்கசமுத்திரத்தில்மூழ்கினேன் என்னுடையசிறியபுத்தியினாலேயோ பூர்வகாலத்திலேநான் செய்தபாவத்தினாலேயோவென்று விசனத்தையடைந்தார் பிர்ம்மதேவர்—என்று. (௫௩)

எய்தினேன்முடியறிந் தேகிலேனெனும்
பொய்களையுங்கினும பொருந்தவேயுரை
செய்துணைபிறிதிலை யென்றுதேடியினன்
கைதையின்மடல்வாய்ப் பின்புகண்டனன்

(இ-ள். இவ்வளவுதூரந்தேடிவந்துமுடியையறியாமற்போனேன் ஆகிலுமினிமேற்போய் விஷ்ணுவினிடத்திற பார்த்தேனென்று பொய் சொன்னாலுங்கூட அந்தாசையாகப்பார்த்தேனென்றுபொய்சாட்சிசொல்லுகிறதற்கு ஒருதுணையுமில்லையேயென்றுவிசனப்பட்டார் அந்தசமயத்தில்தாழம்பூமடல்தான்மேலேயிருந்திறங்கப்பார்த்தார்பிரமா-ஏ.

இம்மடவெங்குற்று வருவதென்னுமுன்
னம்மடலணைந்ததங் கசுளையெற்றனன்
செம்மறன்முடியிலவீழ் செம்மலர்க்கையான
மெய்மைசேருயி ப்பதாய் விடுமினென்றதே

(இ-ள்.) இந்தத்தாழமடல்எங்கேயிருந்து வருகிறதென்று ஆலோசிக்குமுன்னே தாழம்பூபிரம்மாவுக்குச்சமீபத்தில்வர அதைக்கையினாலேபிடித்தான் அதுபரமசிவனுடையசிரசிலிருந்து தவறிவிழுந்ததாழம்பூவானபடியினாலே மெய்மையானபெருமூச்சோடு என்னைச் சீக்கிரத்திலேவிட்டுவிடுவாயென்றுசொல்லியது—என்று. (௫௪)

ஆரணிகைதையே யிங்குநீவருங்
காரணமேதெனக் கமலன்கூறினன்
ஆரணனாரண னளவிடாமுத
றாரணிமுடியினுந் தவறிவீழ்ந்தனன்

(இ-ள்.) அந்தர்தாழம்பூசொல்லியதைக்கேட்டு அழகுபொருந்திய தாழம்பூவேஙகேயிருந்து வருகிறாயென்றுபிர்மாகேட்கப்பிரமாவினாலும்விஷ்ணுவினாலும் அறியகூடாதபரமசிவனுடைய சிரசிலேயிருந்து தவறிவிழுந்தேனென்றுசொல்லியது—என்று. (௫௫)

தார்ப்பொலிமுடியினுந் தவறிவீழ்தபின்
றற்பதினாயிரம வருடநண்ணினேன்

னேற்பதுவிடுசெவன் றிசைப்பவெங்கதையைப்
பார்ப்பதுவிடுத்தயன் பகர்வதயினான்

(இ-ள்) கொன்றைமாலைப்பிரகாசியாநின்ற சுவாமியினது திருமுடி மேலிருந்துவிழுந்ததும நாற்பதினாயிரம் வருஷங்களாகவந்தேன் இன்னமதான் பூமியிற்போகவில்லைவருந்தத்தேடுவருகிறேன் என்னைப் பிடிக்கவேண்டாம்விடென்று தாழம்பூசொல்லப்பிரமா சுவாமியைத் தேடுகிறதைவெறுத்துச்சிலவார்த்தை சொல்லத்தொடங்கினார் -எ-று.

துன்னியவுனதையே துணையுமாய்நமக்
கின்னமுமலைவுறு திடுக்கணீக்கின
யுன்னிலுமுயிர்த்துணை யுறவுவேறிலை
யன்னியநல்லனு னனமுமல்லவே.

(இ-ள்) என்சமீபத்திலடைந்த தாழம்பூவே நீ எனக்குத் துணையாயிருந்து நானின்னமுந் தேடி யலையாமல் என்வருத்தத்தை நீக்கினையுன்னைப் பார்க்கிலுமுயிர்போன்றதுணையும் உறவும்வேறில்லை நானும அன்னியனல்ல அன்னபட்சியுமல்லவென்றுசொன்னான்பிரம்மதேவன் -எ-று.

நாமமோரான்முகனு மாலுமா
யேமமாமிதற்கள விசைக்கவெண்ணினேன்
பூமிகீழிடந்தவன் போயினான்மனத்
தீமையென் றிருமுடி தேடிக்காண்கிலேன்.

(இ-ள்) என்பெயரே பிரமா நானும் விஷ்ணுவுங்கூடி அக்கினிசொரூபமாகிய இந்தமலையினளவைத் தெரிந்துகொள்ள வெண்ணினோம பூமியின்கீழிடத்தைப்பெயர்த்துக்கொண்டு அடியைஅவன்தேடப்போனான் பாவியாகியநான்முடியைக்காணவெகுநாளாய்த்தேடியுங்காண்கிலேன் -எ-று

அசலைவாவிது வதுகொடென்பய
னெடியநின்வாவினா னினைத்ததெய்தினம்
படியளந்தவனுடன் பறவையாமிவன்
முடியறிந்தானென மொழிதல்வேண்டுமே.

(இ-ள்.) ஆதியந்தமாக நடந்தசமாச்சாரமிது அதைக்குறித்துப்பேசுவதனாற்பயனென்ன பெருமைபொருந்தியஉன்னுடையநலவாவினாலே நினைத்தகாரியமுடிக்கால்தான்பயன் பூமியையளந்தவிஷ்ணுவினுடன் பட்சியாயுருவெடுத்த இந்தபிரமாசிவனுடைய முடியையறிந்தானென்று நீசொல்லவேண்டுமென்று பின்னுஞ் சொல்லுவான்பிரம்மதேவன் —எ-று. (௯௰)

வஞ்சமென்றிகந்திடேல் வருந்தினோர்க்குயிர்த்
தஞ்சமாமெனிற்பெரும் பொய்யும்சாற்றலா
மஞ்சியேதொலைத்தகர் மொழியுமாறிது
கஞ்சமுண்டமைவதோ வன்புவேண்டினார்.

ந்றேன்றி-புரியசிவன்னிடங்கலந்தகதையுமுரைத்தருளுகெனவுரைப்ப தானன்.

(இ-ள்) நந்திகேசுரர் மார்க்கண்டேயரிஷியைப்பார்த்து விஷ்ணுவும் பிரமாவும் அறிதற்கரிதாகிய திருமலையினது சிறப்பை எனக்குச்சொல்லுதற்கரியதென்றாலும் எனக்குத்தெரிந்த அளவில் சிறிது உமக்குத் தெரியும்படிச்சொன்னேன் இனிச்சொல்லவேண்டியது என்னவென்றால் வரிசைபெற்றமார்க்கண்டேயரிஷி சந்தோஷித்து வணங்கிச் உமையாளைநோக்கித் தவஞ்செய்து அவரிடப்பாகம்பெற்றதுவும் சொல்லவேண்டுமென்றுகேட்கச் சொல்லத்தொடங்கினார்-எ-று. (அஅ)

இரண்டாவதுதிருமலைச்சருக்கமுற்றிற்று.

ஆக-திருவிருத்தம்-கசுச.



உ

சிவமயம்.

## மூன்றாவது

## பார்வதியார்திருவவதாரச்சருக்கம்.



அறுசீரடியாசிரியவிருத்தம்.

பண்ணிறைவர்பதினொருவ ரெழுவரெணமர் திசைக்கிறைவர் பணி
மாட்டுள்ளோர், இந்திரசிதமபுருடசித்த ரியக்கரின யலாமுனிவர்கிளைபி
னுள்ளோர், மணாளுமலரயன்றிருமால் கமலை நாதை மலர் மடந்
தைமகிழ்ந்துசூழ், மூவிணைவனையிகழ்ந்துதக்கன் முடியாத பெருவே
ள்விமுடிக்கலுற்றான்.

பூருவகண்டம்.

கேளுமார்க்கண்டேயரே முன்னாளிலே பிரமாவினிடத்திற் பிறந்த தக்கனென்பவன் அரியதபசுசெய்து உயர்ந்தவரங்களைப்பெற்று ண்டபின்பு பிரமசித்தனுகிவாழுகிறகாலத்திலே பார்வதியான

ள்தன்னிடத்திலேபிறக்க அந்த அம்மனைச்சுவாமிக்கு கலியாணஞ்செய்துகொடுத்து மாமனுக்குப்படிவரம்பெற்று அந்தப்படிசெய்தபின்பொருகாள் இவன்சுவாமியினுடையசபைக்குப்போனான் அவ்விடத்தில்சுவாமிதனக்குஎழுந்துமரியாதைசெய்யவில்லை என்கிறகோபங்கொண்டு தன்னுடையவீட்டுக்குவந்து சுவாமியைப்பார்க்கிலும் உயர்வையு[illegible]யவேண்டுமென்று.

(இ-ள்.) பன்னிரண்டுசூரியர்கள் - பதினொருருத்திரர்கள் - சததரிஷிகள் - அஷ்டதிக்குப்பாலகர் - நாகலோகத்தார் - கின்னரர் - கிம்புருடர் - சித்தர் - யட்சகர் - தேவர்கள் - முனிவர்கள் - நிலைபெறறபிரமா விஷ்ணு - சரஸ்வதி இலட்சுமிகவுஞ்சந்தோஷத்தையடைந்துசூறறிக்கொள்ளஎல்லோருக்கும்முதல்வராகிய பரமசிவனைநிந்தித்து முடியக்கூடாதபெரியயாகஞ்செயயத்தொடங்கினான் -எ-று. (க)

எந்தைசெயுமசம்பார்க்க விடையருளென்றிறைக்கிறைவி விசைத்தாளந்தை, புந்தியிலாதிகழ்ந்தனனென் றுரைத்தனனீதெனை வேண்டிப்பொருப்பாயென்று, வந்தனஞ்செய்தனளவளை நகைபுரிந்துகடிதுசென்றுவருவாயென்றான், கந்தமலர்குழலாளுந் தந்தைமகந்தொடங்குகள தவத்தைசசார்ந்தாள்.

(இ-ள்.) பார்வதிதேவியானவள் தகப்பனாகிய தக்கன்யாகம்பண்ணுகிறதைக்கேட்டுசுவாமி என்னுடையதகப்பன்செய்கிறவேள்வியைப்பார்த்துவருகிறதற்கு உத்தரவுகொடுமென்றுகேட்க அதற்குசுவாமியானவர் உன்னுடையதகப்பன் புத்தியில்லாமல் என்னைமிகவும் நிந்தித்திருக்கிறானே நீபோகலாமாவென்றுசொல்ல அதைக்கேட்டுசுவாமீ என்தகப்பன்செய்த இந்தக்குற்றத்தை என்னைவேண்டிப்பொறுக்கவேண்டுமென்று நமஸ்காரஞ்செய்தபோது அந்தஅம்மனைப்பார்த்துநகைத்து நல்லதுநீபோய்சசீக்கிரத்தில்வந்து சேரென்றுசொல்லப்பார்வதியும் தகப்பன்யாகஞ்செய்கிற இடத்துக்குப்போனாள்-எ-று ( )

தாயரைக்கண்டடிதொழுதா ளவட்டுறவா திருந்தனள்றந்தை யானன், தீயவனைப்பணிந்தனளாகவனு மிகழ்ந்தானிகழ்ந்த சொல்லைநோக்கிப், பேயிருக்குஞ்சுடலைபெண்பிழைபிறந்துவிடுகவுங்கள்பெறுவாழ்வென்று, வாய்பிறைக்குங்கொடுமைசொலி மறைந்தனளச் செயலறிந்தான் மங்கைபாகன்.

(இ-ள்.) பார்ப்பதியானவள் தக்கன்யாகசாலைக்குப்போய்தன்னுடையதாயைவணங்கினாள் அவள் இந்தஅம்மனைத்தழுவி உபசாரஞ்சொல்லாமலிருந்தாள் அதன்பின்பு தீமைபொருந்திய தகப்பனைவந்தனஞ்செய்ய அவனும்நிந்தித்தான் அதைப்பார்த்துக்கோபங்கொண்டு உன்னுடையயாகசாலைவாழ்வுபேயிருந்து விளையாடுஞ்சுடலையாகிப்போகக்கடவதென்றுசபித்து இந்தப்பாவி வளர்த்ததேகம்இருக்கக்கூடாதென்றுயோகத்தினாலேதன்னுடைய தேகத்தைவிட்டாள் அந்தச்செய்கையையுணர்ந்தார்சாம்பவமூர்த்தி-எ-று. (ங)

(கலிவிருத்தம்) உண்ணிலாவுவஞ்சிசெல்ல ,வொருவனைவியுய்யுமோ
தண்ணிலாமுடிக்குணின்றுதழலையொண்டிறைக்கையு

லண்ணல்வெம்பிமுனிவுகொள்ளு மளவினெற்றிவிழிதனில்
விண்ணடுங்கமண்ணடுங்க வீரன்வந்துதோன்றினான்.

(இ-ள்.) எப்பொழுதுங்கூடியிருந்த பார்ப்பதிதேவிதனை விட்டவுடனே ஒன்றியாகியிருந்த பரமசிவனுடைய உயிர்சவுக்கியத்தையடையுமோ குளிர்ச்சிபொருந்தியசந்திரன் தங்கியுடையசிரசிலேதானேயிருந்து நெருப்பைவாரிச்சொரிகிறபடியினாலே அதிகதாபத்தையடைந்து [illegible]தக்கனாகிய பாவியினாலல்லவோ இந்தவருத்தம் உண்டாச்சுதென்றுகோபித்துக்கொள்ளுகிறபோது அவருடையநெற்றிக்கண்ணிலிருந்துவீரபத்திரரானவர் ஆகாயஉலகமும் பூமியும் நடுங்கும்படியாகத்தோன்றினார்-எ-று. (௪)

மஞ்சுபற்றியுடல்கறுத்த மணிமயூரமுடியுடன்
சஞ்சரிக்குமேருவென்ன விடிமுழங்குதழலின்வாய்
நஞ்சுகொப்பளிக்கநெற்றி நயனமுங்கொதிக்கவே
லஞ்சலித்தகையொடெங்க ளையன்வந்துதோன்றினான்.

(இ-ள்.) மேகத்தைப்பார்க்கிலும்உடம்புகறுத்தமயிலினதுநிறம்போன்ற மரகதத்தினாலிழைத்த கிரீடத்துடனே சஞ்சரிக்கின்றமேருவுக்குச்சமானமாகி இடிபோல்முழங்குகின்றநெருப்பாகியசொற்களையுடையவாயானது நஞ்சைக்கொப்பளிக்க நெற்றிக்கண்கொதிக்கச்சிரசின்மேல்வைத்துக் கூப்பியகைகளோடு எமதுஐயனாகிய வீரபத்திரர்வந்துதோன்றினார்-எ-று. (௫)

ஒழித்தசிங்கவுரிபுயத்தி னுத்தரீயமாகவே
கழித்தெறிந்தவல்லியத்தி னதளிசைத்தகச்சையாய்
விழித்திமைக்குமுன்னம்விண்ணின் வெளியடைத்தமேனியா
தழைத்ததென்னவென்னவென்றனையன்வந்து தோன்றினான்.

(இ-ள்.) இரணியனைக்கொன்ற நரசிங்கத்தினுடையதோல்உத்தரீயமாகவும்தாருகாவனத்துரிஷிகளால்விடப்பட்டுசுவாமியினால் மரணத்தையடைந்த புலியினதுசர்மம் இடுப்புக்கச்சையாகவும்விழித்து இமைக்கிறதற்குமுன்னே ஆகாயமெல்லாநிறைந்ததேகத்துடனே என்னையழைத்தது என்னகாரணம் என்னகாரணமென்றுவீரபத்திரர்வந்தார்-எ-று. (௬)

முக்கணத்தனீர்கொடாது கனல்கெ டுக்குமுகிலென
தக்கன்வேள்வியைத்தகர்த்து மீள்கவென்றுசாற்றினை
னக்கணத்திலுவகைபொங்கி யடிவணங்கியேகினான்
பக்கநின்றபூதநாதர் பாரிடங்கள்சூழவே.

(இ-ள்.) என்னையழைத்தகாரியம்என்னவென்றுகேட்டவீரபத்திரரைப்பார்த்து மூன்றுகண்களையுடைய பரமசிவன் சலத்தைப்பொழியாமல்நெருப்புகளைக்கக்கும் மேகம்போற்போயதக்கனுடையயாகத்தையழித்துவாவென்று அருளிச்செய்ய அந்தட்சணமேவீரபத்திரர் அதிகசந்தோஷத்தையடைந்து சுவாமியினது திருவடியைத்தொழுதுபக்கத்தினின்றபூதக்கூட்டங்களும் பேய்களுஞ்சூழப்போனார்-எ-று. ()

நஞ்சுகொப்பளிக்குநாக நாவிரண்டுமாலையா
[illegible]ஞ்சாட்டிபூதலே வாலவட்டம்வீசவே

குஞ்சரங்களெட்டையுங் குதம்பையாகவிட்டவெண்
கஞ்சகத்தராநால்வர்தூய கவரிநின்றுவீசவே.

(இ-ள்.) விஷத்தைக்கக்குகின்ற அஷ்டமாநாகங்களை மலையாகத் தரித்துக்கொண்டு பத்துபூதங்கள் நீலவானமான ஆலவட்டம் வீசிக்கொண்டுவரத்திக்கிலிருக்கின்றயானைகளெட்டையுங்காதிலேகுண்டலமாகத்தரித்துக்கொண்ட வெள்ளைச்சட்டையணிந்த நாலுபேர்கள் சுத்தமாகிய சாய்மரம்வீசவும் புறப்பட்டார் வீரபத்திரர்-எ-று.

தீயிருந்தவுதரவெம்மையை விண்பிழிந்துதீர்த்திடும்
பேயிரண்டுநூறுநூறு காளமம்பிடிக்கவே
வாயிரண்டுபோலுமாலை மதியிடைந்தபூதமோ
ராயிரங்கவிக்கமுத்தி னுகபத்திரங்களே.

(இ-ள்.) வடவாமுகநெருப்புக்குடிகொண்டிருந்தவயிற்றினுடைய பசியையேமேகங்களைப்பிழிந்துகுடித்து ஆற்றிக்கொள்ளுகின்ற இரண்டாயிரம்பேய்கள் எக்காளம்பிடிக்கவும் சந்திரனை இரண்டாகப்பிளந்து இரண்டுகடவாயிலும் வைத்ததுபோலுமிருக்கின்ற ஆயிரம்பூதங்கள் முத்துக்குடைகள்பிடிக்கவும் புறப்பட்டார்-எ-று. (க)

மாயுமாயாதந்தசங்கு கோடிகோடிமருகவே
தீயின்வாயினூர்திதந்த சிங்காரசமூதவே
சாயுமெமனையில்காலமேதி தந்தகொம்பிசைக்கவே
யாயிரங்களிறெருந்த தனைதத்தேரிலேறினன்.

(இ-ள்.) இறந்திறந்துபிறக்கிற அனேககோடி விஷ்ணுக்களுடையகையிலிருந்தசங்குகளை அனேகபூதங்கள்வாயில்வைத்துஊதிவாவும் இறந்தஅக்கினிபகவான் வாயுபகவானேறுகின்ற ஆட்டுக்கிடாசவமானதுகளுடையகொம்புகளை வாயில்வைத்து அனேக பூதங்களூதவும் இறந்துபோன யமராசாக்களேறிய எருமைக்கிடாக்களுடைய கொம்புகளை வாயில்வைத்து அனேகபூதங்களூதவும் ஆயிரம் யானைகள்கட்டியிழுக்கிற தேரிலேறினார் வீரபத்திரர்-எ-று. (ம)

சிலகணங்களானையான சிலகணங்கடோதரா
யுலவுகின்றசிலகணங்க ளோடுகின்றவாசியாய்
மலைவுகொண்டசிலகணங்கள் மனிதர்தேவராயின
வலகைதானுமளவிலா தனந்தவேடமானதே.

(இ-ள்.) அப்படிவீரபத்திரர் தேரிலேறினபோது சிலபூதங்கள் யானைரூபங்கொண்டதுகள், சிலபூதங்கள் தேரினுருவங்கொண்டதுகள் சிலபூதங்கள்குதிரையானதுகள், சிலபூதங்கள் மனிதரூபமும் தேருமானதுகள், அளவிலாதபேய்கள் அனந்தரூபங்கொண்டு புறப்பட்டதுகள்-எ-று. (மக)

வீரையேமுடங்கவுண்டும் விடாய்கெடாதுமீளுமே
பாரவேழுபாரமுண்டு பசிகெடாதுபடருமே
கூரவேலெறிந்துகால னுடுகெல்லைகொள்ளுமே
போரையேவிரும்பிமுன் னடக்குசென்றபூதமே.

(இ-ள்.) வீரபத்திரர்புறப்பட்டவுடனே யுத்தஞ்செய்யவிரும்பி அவருக்குமுன்னேநடந்தபூதங்கள் ஏழுசமுத்திரத்துநீரடங்கலுங்குடி

தாலும் விடாய்தீராமல் திரும்பும்பாரமாகிய ஏழுலகத்தையும் சாப்பி ட்டுப்பசிபோகாமல் அலைந்துக்கொண்டிருக்கும கூர்மைபொருந்திய வேலாயுதத்தையெறிந்து யமனுடையநாட்டைகொள்ளைகொள்ளுமாறு ப்படிப்பட்ட வலிமையுடையதுகள்-எ-று. (௰௨)

கொண்டலேழையுஞ்சிவந்த குஞ்சிமீதுசுற்றுமே
புண்டரீசாண்டமும் புகைகொளுததிமீளுமே
யெண்டிசாமுகத்தைநாடி யாகசாலைதேடுமே
சண்டவாயுவென்னவகை தட்டியோடுபூதமே.

(இ-ள்.) ஏழுமேகங்களையும்பிடித்துச் சிவந்ததலைமயிரிலேசுற்றி க்கட்டிககொள்ளும் அனேகபிரமாண்டங்களையும புகையுண்டாக கொ ளுப்பினாலேகொளுத்தும எட்டுத்திக்குந்தேடி யாகசாலை யெங்கேயெ னறுதேடும் பிரசண்டவாயுபோலக் கைகளைகொட்டிககொண்டு வீர பத்திரபின்னேயோடுகின்றபூதங்கள-எ-று. (௰௩)

வெள்ளவாழிமதுநுகர்ந்து வீறுகின்றசிலகணக்
துள்ளவந்துபுவனமுழுதுஞ் சுற்றுகின்றசிலகணந்
தள்ளுகின்றபேர்களென்று சாய்க்கநின்றுநகைசெயும்
பள்ளிகொள்ளுமுடனெழுந்து பரிவுகொண்டுபாடுமே.

(இ-ள்.) வெள்ளமாகியசமுத்திரமபோன்ற மிகுந்த மதுவைப் பானஞ்செய்து அதனால்வீறுப்புக்கொண்டு சண்டைக்குஎழுந்ததுகள் சிலபூதங்கள் நம்முடையகுல மியைத்தள்ளுகிறவாகள்-யாரென்றுகே ட்க அவாகளைசசொல்லுகிறதறகாக நின்றுவீரநகைகொள்ளும் சிலபூ தங்கள் நித்திரைசெய்யும சிலபூதங்கள் உடனேஎழுந்து அன்புகொ ண்டுசிவனைககுறித்துப்பாடும-எ-று. (௰௪)

வெதிரசிலம்புமுரசுசஙகம விருதுபம்பையதிரவே
புதியகண்டைமணிதவண்டை புரிமதஙகமழுகக்ள
கதிகடந்துயாகசாலை கண்டுபூதகணமெலா
மதிநிறைந்தானைபோகவையுமவாரிவிசினர்.

(இ-ள்.) வீரபத்திரசுவாமிபுறப்பட்டவுடனே புள்ளாங்குழல் சி லம்பு முரசு-சஙகங்களவிருதாகியஉடுக்கைமுதலான வாத்தியமுழங்க வும், பெரியமணிதவண்டை மிருதங்கம சத்திக்கவும்வழிமுழுதுமபோ யதசகனுடையயாகசாலையைககண்டு எல்லாப்பூதகூட்டஙகளும அ திதியினுடைய பிள்ளைகளாகிய சகலதேவர்களையும அககினிவாரி விசி னதுகள்-எ-று. (௰௫)

காரிலேறிமையிலேறி கடாவிலேறிமலைகமே
லேறிலேறிமகாமேறி பிரேலயேறியலகையாம
பாரிலேறிமானமேறி பகுவிலேறியெண்மருந
தேறிலேறிவாதவீரா சேனைமாளமோதினார்.

(இ-ள்) மேகவாகனனாகியதேவேந்திரனுமஆட்டுக்கடாவிலேறு கின்றஅககினியும எருமைக்கடாவாகனனாகிய யமனும பேய்வாகன னாகிய நிருதியும் மகரவாகனனாகிய வருணனும் மானவாகனனாகிய வா யுபகவானும் அளகாபுரியையாண்டு விமானத்திலேறுகின்ற குபேர னும் எருதுவாகனனாகிய ஈசானியனுமாகிய எட்டுபேர்களுந்தேரி

லேறி எதிர்த்துக்கொண்டுவந்த வீரபத்திருடைய பூதகணங்களை யெதிர்த்தார்கள்-எ-று. (௰௭)

வளிசூலபலேலுலக்கை வச்சிரங்கணிச்சிவாள்
மீளிசேனைகாவலாளர் வீழுமாறுவீசினார்
கூளிநூறிரண்டுசென்று கொடியவெண்மர்பரியெலா
மாளியோடெடுத்தெறிந்த வம்மனைக்குநிகரவே.

(இ-ள்.) திக்குப்பாலகர் எட்டுப்பேரும் பாணம்-சூலாயுதம்-வாள்-உலக்கை-வச்சிராயுதம்-பழுக்கத்தி - இதுகளை வீரபத்திருடையசேனைதலைவர்கள்விழும்படி பிரயோகஞ்செய்தார்கள். அப்போது எட்டுப்பூதங்கள்புறப்பட்டுத் திக்குப்பாலகர் எட்டுப்பேரையும் அவர்களேறிய வாகனங்களெட்டையும் * அம்மனைக்குச்சமானமாக வெடுத்தெறிந்தது கள எ-று. (௰௮)

அலகைநாலிரண்டுவீழ வமர்செயபூதமோடவே
மலைவுகண்டுதிக்குப்பாலர் வெற்றிமாலைசூடினார்
நலிதல்கண்டுவீரன்வாளி நாலிரண்டையேவினா
னுலகபாலருடல்புகுந்து வாமுதமுண்டுலாயதே.

(இ-ள்.) முன்னேஎட்டுப்பூதங்களாலேஎறிபட்டுவிழுந்ததிக்குப்பாலகரெட்டுப்பேரும் அந்தஎட்டுப்பூதங்களுங்கீழேவிழவும், மற்றைப்பூதங்களெல்லாம் ஓடிப்போகவுமயுதஞ்செய்து வெற்றிமாலைசூடிக்கொண்டார்கள் அதுகண்டவீரபத்திரசுவாமியானவர் எட்டுப்பாணத்தைவிட்டார் அதுகள்போய் எட்டுப்பேர்களுடலைத்துளைத்து அவ்வுடல்களுள்இருக்கிற அமுர்தத்தைப்புசித்துச்சஞ்சரித்ததுகள-எ-று. ()

மருங்கிழிந்துகுயிலதாகி வச்சிரத்தனோடினா
னெருங்கியீசனளகையாளி நிருதிவாயுவருணனுஞ்
சுருங்கினார்கடாவிலேறி துஞ்சினனழற்பிரான்
பெருநகையேழுமீசனன்பர் பிறவிபோலறுத்தனன்.

(இ-ள்-) தேவேந்திரனானவன் தன்வாகனத்தைவிட்டுக் குயில்ரூபங்கொண்டுஓடினான் ஈசானன்-குபேரன்-நிருதி-வாயுவருணன்-இவர்கள்தோற்று வெட்கத்தையடைந்தார்கள் யமனானவன் இறந்தான் அக்கினிபகவானுடைய ஏழுநகையையும் சுவாமிஅன்பருடையபாவங்களை அறுப்பதுபோல அறுத்துத்தள்ளினார் வீரபத்திரர்-எ-று. (௰௯)

கச்சமற்றவச்சமோடு கலையதானவெச்சனை
ரெச்சனைவுயிரைவாரியுட லுரிதெரித்தனன்
பசைவல்லியன்னையான பன்னிகர்தாண்டையும்
வச்சிரத்தினாலரிந்து மாமன்முன்புசென்றனன்.

(இ-ள்.) அளவில்லாதபயங்கொண்டயாககர்த்தாவாகியகலைக்கோட்டுமாரிஷிபிரானனுங்தேகமும் வேறாகக்கொன்று உடலை வுரித்து வெரித்தார் பார்வதியின்தாயாகிய தக்கனுடையபெண்சாதியின் இரண்டுகொங்கையும் அறுத்துத்தள்ளிமாமனாகிய தக்கனிடத்திற்குப் போனார் வீரபத்திரர்-எ-று. (௨௰)

---

* அம்மனை மகளிர் விளையாட்டு.

பிச்சருந்துசோமபானம் வீரபானமாகவே
யொக்கநின்றயாகதண்ட மொன்றுகொண்டிருன்றுபோய்
தக்கனொடிரக்கபோது தலையரிந்துகள்ளினு
ளக்கணததிலொன்றுசென் றரைக்கணத்தயின்றதே.

(இ-ள்.) தேவர்கள்கூடிச் சோமபானஞ்செய்கிறதைநீக்கித்தனது வீரமேபானமாகும்படி யாகசாலையிற்புகுந்து யாகஸ்தம்பத்தைப்பிடுங்கிக்கொண்டு எதிர்த்ததக்கனுடையதலையைமலைபோல்கீழேஅறுந்து விழும்படிஅறுத்தார்களினுள் அப்போதத்தப் பூதகணங்களிலொன்று அரைநொடியிலேதானே அந்ததலையைத்தின்றுவிட்டது-எ-று. ()

பசுக்களேறுருத்திரப் பசுக்களாவிதன்னையும்
வசுக்களாவிதன்னையு மற்றதேவராவியும்
முசுசகளபோலொளிதிருந்த முனிவராவிதன்னையு
மசிக்கவீரன்விட்டசூல மள்ளியள்ளியுண்டதே.

(இ-ள்.) மாடுகளிலேறுகின்ற பசுப்போன்ற உருத்திரக் கூட்டங்கள்பிராணனையும்-அஷ்டவசுக்களுயிரையும் மற்றதேவர்கள்உயிரையும முருகுகள போலொளிதது பழுக்கியிருந்தமுனியீசுரர்களுடைய பிராணனையும், பரியாசம்பண்ண வீரபத்திரர்விட்ட சூலாயுதம எடுதது எடுத்துத்தின்றுவிட்டது-எ-று. (உஉ)

வழியினூடுருக்கர்பல்லை யோறுத்துவாரணிமா
வெழில்படைத்தனுடகர் மிரண்டதுண்டமாச்சினன்
சுழலமைத்தகன்குதிக்க வமிர்தமுண்டகலைநிலா
வழலவிக்குமாறுதாளி லப்புவெண்ணெயொத்ததே.

(இ-ள்.) சூரியனுடைய பல்லும்கண்ணும்தெறித்துக்கீழேவிழும்படியடித்துச்சரஸ்பதியைப்பிடித்து இரண்டாகக்கறுத்தார் இலட்சுமியைமூக்கறுத்தார் வீரகண்டாமணியைத் தரித்த காலினாலே சந்திரனை மிதிக்க அவன்நசுங்கித்தன்னுடையயாகசாலைநெருப்பைமிதித்தபடியினாலே அந்தவெப்பத்தினால் அப்பியவெண்ணெயைப்போலானான்-எ-று.

காயமண்ணில்விட்டதேவர் கரியமேனியலகையாய்
மாயமாகிமுன்னையாகம் வந்துதோன்றியமாசெயத்
தூயசேனையாயபேர் தொடர்ந்துசாகவாசெய்தார்
பேயதாயிருக்கவும் பிணக்ககன்றதில்லையே.

(இ-ள்) பூதகணங்களாலேஇறந்துபோனதேவர்கள் கரிய உடம்பினையுடைய பசாசாகிமறுபடியு முன்யாகத்திலே மாயமாய்த்தோன்றிமூர்ந்துசண்டைபண்ண அவர்களை வீரபத்திரர்சேனை அடித்துக்கொன்றார்கள் ஆனபடியினாலேபேயாய்ப்போயுந்துக்கம்நீங்கவில்லை-எ-று.

விதிபுனைந்தவோமகுண்டம் வேறுபட்டதென்னினும்
புதியசோறுமெள்ளினோடு பொரியும்வாய்புகட்டிமுன்
குதிகொளெய்க்கடாமெடுத் தொழுகுபூதகூளிகண
ணுதரகுண்டமனமெழுந்த வோமகுண்டமானதே.

---

தின்றுவிட்டதென்றது-இனையம்பிளந்துகொன்றதுஎன்றுகொள்

(இ-ள்.) பிரம்மாவினாலே விதிக்கப்பட்ட யாகசாலாசத்தையடைந்தாலும் அதற்குபயோகமாகவைத்திருந்த சோறுமுள்ளனவும் பொரியும் ஒருபூதம் வாயிற்கொட்டிக்கொண்டு நெய்யகுடங்களையெடுத்து மடமடவென்று விட்டுக்கொள்ளும்போது அதனுடைய வாய் ஓமகுண்டமாகவும் உதிராக்கினியே ரூபமாகவுமிருந்தது—எ-று. (௨௫)

அட்டதிக்குப்பாலரும் வசுக்களுங் குருக்களும்
முட்டரான முப்பதிற்று மூன்றுகோடி தேவரும்
பட்டபோது வாத மெய்களை பழுதுறுதுதன்னுளே
இட்டபூதவுதரமுன்னையாகசாலையொத்ததே

(இ-ள்) அஷ்டதிக்குபாலகரும் அஷ்டவசுக்களும் தலைவராகவந்த குருக்களும் முட்டுப்பட்ட ராஜியமுப்பத்து மூகோடி தேவர்களும் இறந்தபோது அவர்கள் தேகமவீணாகப்போகாமல வீரபத்திரருக்கு முன்னே அவருடைய சேனைகள் சாப்பிட்ட படியினாலே அந்தப்பூதகணங்களுடைய வயிறு யாகசாலையைப் போன்றது—எ-று. (௨௬)

கறபகாலமுங்கெடாத கணமிதிக்கவமரர்தம்
மறபமாமுடம்பிரத்தமாவிகாரமொத்ததால
பற்பலவியக்கர்சித்தர்பண்டிசிந்துகூடர்களாம்
சர்ப்பயாகமொத்ததன்றுதக்கன் செய்தயாகமே

(இ-ள்.) கற்பகாலத்திலும் அழிவில்லாத பூதகணங்கள் மிதித்தபடியினாலே தேவர்கள் அற்பமாகியவுடம்பில்நின்று பிரிட்டரத்தமான துயரத்துக்குநெய்யெடுத்துச்செரிதல்போலிருந்தது பல்ல யட்சசித்தர்களுடைய வயிறுபிதுங்கப்பட்டு அவர்களுடைய நாட்கொடியாகச்சிந்திவிடகிறது சர்ப்பயாகம் செய்ததையொத்தது அன்றுதக்கன் வேள்வி—எ-று. (௨௭)

சிறந்த திக்குபாலராதி தேவ சித்தர் முதலினோர்
இறந்திறந்துபோகவேதனின்மையிலேயமரினு
பிறந்துவந்துவந்துபோர்பெருக்கினாபிறந்தபேர்
மறந்து வீழ வீரன்மோதி மாநிலத்தினண்டினன்

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய திக்குப்பாலகர் முதலாகியதேவர்கள் சித்தர்கள் இறக்கப்பிரம்மாவானவர் நொடிப்பொழுதிலே யவரைப்படைத்துக்கொண்டுவந்தார் அவர்களமறுபடியும் யுத்தஞ்செய்தார்கள் அவர்கள் பின்னும் பிறவாமலிருக்கும்படி பிரமாவையடித்து யுத்தம்செய்யத்தொடங்கினார் வீரபத்திரர்—எ-று. (௨௮).

செத்ததேவர்மீளவும் செருச்செயப்படைத்திடும்
கைத்தலங்களவீழுமாறுகமலனானைமோதினன்
*முத்தலைக்கொள்படையெடுத்து முண்டகத்தர் சிந்தைசேர்
பத்துமைந்தர் சென்னியும் படிக்குவேபரப்பினன்

(இ-ள்.) இறந்துபோன தேவர்கள் மறுபடியும் சண்டைசெய்யப்படைக்கும பிரம்மாவினுடைய கைகளை அறுத்துத்தள்ளினார் மூன்றுக

* முத்தலைக்கொளபடை-சூலாயுதம்

லையுடையஆயுதத்தினாலே அவர்மனதிலுண்டாகிய பத்துபிரமாக்களுடையதலைகளையும் குதறி பூமியில்விழத்தள்ளினார் வீரபத்திரர்.எ-று

அண்டகூடமுண்டுமிழ்ந்தவாதிமாயனையர்செயத்
துண்டமேருவெனவிளங்குகருடன்மீதுதோன்றியே
விண்டவாளிவருடமாக்கவீரன்மார்பில்வீசினான்
கண்டதுண்டமாகவீரன்கையிலவாளியேவினான்

(இ-ள்.) அண்டங்களை விழுங்கி உமிழ்ந்தமுதல்வராகியவிஷ்ணு சண்டைசெய்யமுகத்தையுடைய மேருகிரியாக விளங்கிய கருடன்மேலேறிக்கொண்டு அனேகபாணவருஷங்களவீரபத்திரர் மார்பில்படும்படியாகப்பொழிந்தார் அப்படிவிட்ட பாணங்களையெல்லாம் துண்டமாகத்தன் கைப்பாணத்தினாலே அறுத்தெறிந்தார்வீரபத்திரர். ௬௰

வையமுண்டமால்வெகுண்டுவாள்விதிர்த்துவீசினா
னையனங்கொர்வாளியாலறுத்தெறிந்தோரம்பினாற்
பையராவருந்தியாவிபருகினான்மெய்யகருகினான்
கையிலாழியேவினான்கனிந்தண்ணல்காலிலே

(இ-ள்.) விஷ்ணுவானவர் வில்யுத்தம் பண்ணுகிறதற்குச்சக்தியில்லாமல்கோபங்கொண்டு ஒருகத்தியையெடுத்துசசுற்றி வீசினார் வீரபத்திரர் அந்தகத்தியை ஒருபாணத்தைவிட்டு அறுத்தெறிந்து ஒருபாணத்தினாலே பாம்பைக்கொல்லுகின்றகருடனைக்கொன்றுவிட்டார் அதுகண்டு துக்கத்தினாலேவுடம்புகறுப்பாய்க் கையிலேயிருக்கிறசக்கரத்தை வீரபத்திரர்மேல் பிரயோகம்செய்தார் அதுஓடிவந்து சுவாமிகாலிலேவிழுந்துபணிந்தது—எ-று. (௬௧)

எந்தைமுன்னளித்தவாழிபெற்றதாளில்வீழவே
யந்தமெய்யொழிந்துடனரியரியினுருவமாகியே
வந்துவந்துபோர்தொடங்கிவாளின்வேலின்வல்வினை
துஞ்சிவேறோர்கேழலாகிவாரிமீதொளித்தனன்

(இ-ள்.) முற்காலத்திலே விஷ்ணு ஆயிரம்தாமரை மலரைக்கொண்டு பரமசிவனைப்பூசித்து வருகிறபோது இவர்பத்தியைப்பரிசோதிக்கவேண்டிஆயிரம்பூவிலேஒருபூவைச் சுவாமிமறைத்துவைத்தார் விஷ்ணுபூசைசெய்துஅருச்சனைபண்ணிக்கொண்டு வரும்போது ஒருபுட்பங்குறைய அதற்குப்பதிலாகத்தம்முடைய தாமரைப்பூ ஒத்தகண்ணைப்பிடுங்கி அருச்சிக்கச்சுவாமிக்குமனம் சந்தோஷம்வந்து சக்கராயுதங்கொடுத்தார் அந்தசக்கரத்தைத்தானே சுவாமிமேலேவிட அதுபயந்துகாலில் விழவேஇனிமேல்இந்தரூபத்தோடேநின்றால் பிழைக்கமாட்டோமென்று அந்தஉருவத்தைஒழித்துப் பன்றியாகவும் சிங்கமாகவுமுருவமெடுத்துவந்துயுத்தஞ்செய்ய அந்தவுருவங்களை வாளாயுதத்தாலும் வேலாயுதத்தாலும் வீரபத்திரர்வென்றார் அதன்பின்பு மிகவும்பயந்து மீனுருவமெடுத்துச்சமுத்திரத்திலேவிழுந்துஒளித்தார்—எ-று. (௬௨)

புவியுண்டநெடுமாலுமபழையபடிபுவியுண்டுபோனான்வேதன்
தவியுண்டுதலைநாலுந் தினையுண்டாரிமையவர்தங் குடியூறுண்டார்
அவியுண்ட கணகுண்டம்பேயிறைச்சியருந்தசனகலமேயான
தவியுண்டுமனமகிழ்ந்தங் கெய்ததவமுனிவரெல்லா மவியுண்டாரே.

(இ-ள்) மண்ணையுண்டவிஷ்ணுவுந்தோற்று மண்ணைவாயிற் ட்டுக்கொண்டொளிந்துக்கொண்டார் பிரமாதவிந்து நான்குதலை றுபட்டுஇறந்தார் தேவர்களுந்தண்டத்தால் அடியுண்டு இறந்தார்கள் பூதகணங்கள் இறைச்சிசாப்பிடுகிறதற்குலமகுண்டமபாத்திரமானது அவிர்ப்பாகம்சாபபிட்டுவந்த முனிசிரேஷ்டர்கள் எல்லாரும்வீரபத்தி ரசுவாமியினால் இறந்தார்கள்-எ-று. (௧௩)

இங்கிதுவாய்முடிந்ததற்பின் வீரனிறைபதம்பரவியிசைசர்தானெ
ல்லா, மங்கணனுமுனிமாறியருள்சுரந்து மகததிறந்தாரக்காவியீடந்து,
மங்கரியபதங்களெல்லாமபழையபடியுதவுதலுமவணங்கிப்போனார், சங்
கரியைமுன்பெற்றானென்பெற்றானறனக்காட்டுதத்லைப் பெற்றானே

(இ-ள்) இவ்விடத்தில்இவ்விதமாகயாகசாலையோடு சருவதிரபேரும் நாசதலைதயடைந்தபிறபாடு வீரபத்திரர் கைலாயத்துக்குப்போய் சசுவாமியினுடைய பாததிலேவணங்கி அங்கேநடந்தசமாச்சாரமெல்லாஞ்சொன்னார் அதுகேட்டருளிப்பரமசிவனுங்கோபமாறிகிருபை பிறந்து யாகத்திலிறந்தவர்களனைவரையும் பிழைப்பித்துக் கேடிலலாத அவ்விடங்களையவரவர்க்குப்பழையபடியே அருளிசசெய்தலும் அவர்களசுவாமி நாஙகளவிவேகமிலலாமையினாலே செய்த குற்றத்தைப் பொறுக்கவேண்டுமென்று நமஸ்கரிந்து விடைபெற்றுக்கொண்டார்கள் பார்வதியைப்பெற்றதக்கனுக்குமாத்திரம் சிரசைசெய்ததற்கு அடையாத அடையாளமாக ஆட்டுத்தலையை அவனுடலில் வைத்துப பெருத்தி எழுந்திருக்கும்படிசெய்தார்-எ-று. (௧௪)

என்னாதன் றனையிகழ்ந்தோன் செல்வியெனவுலகுரைக்குமிடுக்கண்டீர
தன்னாகந்தன்யோக சாதனத்தால்விடுத்திமயவனறவத்தினாலு (த்
முன்னாகமைநாகன் றனைப்பயந்த மேனியாது முயற்சியாலு
மின்னாகவவதரித்தா ளமரரெல்லாங் கற்பகப்பூவீசினாரே.

(இ-ள்) எனக்குநாதராக இருக்கின்ற பரமசிவனைநிந்தித்ததக்கனுடையகுமாரியென்றுபழிபபாகவுலகஞ்சொல்லுமேகம்மையென்று பார்வதி அந்தத்துக்கந்தீரத் தன்னுடையதேகத்தை யோகாக்கினியினாலே நிவர்த்திசெய்து இமவற்பருவதராசன் தபோமகிமையினாலும் முன்னேமைநாகனென்கிற பிள்ளையைப்பெற்றமேனைதேவியினுடைய முயற்சியினாலும் அவர்களுக்குக்குமாரியாக அவதாரஞ்செய்தாள் தேவர்கற்பகப்புஷ்பங்களைவருஷம கபொழிந்தார்கள்-எ-று. (௧௫)

சிந்தாகதத்தோன்றுசத்தி சிவத்திரண்டாய்ஞானமிச்சைசெயலின்
மூன்று, சொத்தாகிக்குடிலைதரு நாதவிந்துவிரண்டினுக்குஞ் சொரூ

கொம்பாகி, முத்தாகிச்சிவனிடத்தே யுருத்திரன்மாலயன்முதலா முளைத்தமூல, வித்தாகிநிறைவாளைப் பயந்தவறகுமுடிந்ததவம விளம்பலாமோ.

(இ-ள்.) சித்தாந்தமாகச்சொல்லப்பட்ட சிவனிடத்திலேதோன்றுமட்ட ஆதிஞானசத்தியாய்ப்பின்பு அச்சிவத்திலின்றும பிரஞானசத்தி யின்று வேறுபட்டுப்பின்புஞானசத்திஇச்சாசத்தி கிரியாசத்தியென மூன்றுவகையாகிக் குடிலையினாலுண்டாகிய நாதவிந்துகளுக்குக கொழுகொம்பாகியுமசுவாமிக்குமுத்தாகியும பரமசிவனிடத்தில் உருத்திரன் விஷ்ணுபிரமாமுதலானவர்களஉண்டாகிறதற்குமூலமாகிய வித்தாகியும எங்குநிறைந்தபார்வதியைப் பெற்றவாகுமுடிந்த தவப்பெருமையைச சொல்லக்கூடுமோ—எ-று. (௫௬)

கலைவளருமதிபோன்று சிவனைவெல்லாதன்வளர்க்குங் கரும்புபோன்றும, பலகலையுந்தெளிந்துயர்ந்து பந்துகழலூசல்பறறிபயிலுநாளில், மலைபாசனிடத்தின்மறை நாரதனொருநாளில் மகிழவாயெய்தி, யுலகமெல்லாங்குடியிருக்குந் திருவயிற்றுளிலக்கணம்பார்த்துரைக்கலுற்றார்.

(இ-ள்.) பார்வதியானவள்இமாசலராசனுக்குமேனாதேவிக்கும் குழந்தையாகி வளர்பிறைபோல நாளுக்குநாள்வளர்ந்து மன்மதனானவன் சிவனைவெல்லவில்வேண்டி அதற்குவளர்ந்தகரும்பைபோலத்துப்பலசாஸ்திரங்களையுங்கற்றுப் பந்துகழங்கு ஊசல்விளையாட்டு முதலானதுசெய்துகொண்டு வருகிறகாலத்தில் மலைபாசனிடத்தில் வேதமுணர்ந்தநாரதர் ஒருநாள்வந்து உலகங்களெல்லாம் வயிற்றிலேவைத்திருந்த அம்மனுடைய இலட்சணம்பார்த்துச்சொல்வார்-எ-று. ()

நெற்றியிலோர்புறத்திலரை நேத்திரமுண்டாமொருகைநெடியசூலம மற்றுமொருதனமறையு மொருபாகமரகதம்போய்ப் பவளமாகும் கற்றைநெடுங்குழற்பாதி சடையாகுமொருகைவளை கழன்றுபோகு மூற்றுவருமிவ்வகைளென மலையாசன்மனமுருகி யுவகையானான்.

(இ-ள்) வாரும்பருவதராசனே உம்முடைய குமாரத்திக்குச்சிலபொழுதிலேநெற்றியில் ஒருபக்கத்தில் அரைக்கண்தோன்றும ஒருகையிலேசூலமுண்டாகும ஒருபக்கத்துஸ்தனம் மறைந்துபோகும்பாதிசரீரம் பசசைநிறம்போய்ப்பவளநிறமாகுமகூந்தலிறபாதிசடையாகும்ஒருகையிலேவளையல்களில்லாமறபோகும் இதுகள்சம்பவிக்குமென்று நாரதர்சொல்ல பருவதராசன் உள்ளமுருகிச சந்தோஷத்தையடைந்தான்-எ-று. (௫௮)

வேறு-அறுசீரடியாசிரியவிருத்தம்.

வையநீர்க்கங்கைபாயும் பணிவரைமருங்கினங்காள்
துய்யநீர்ச்சடையான்வந்தங் கோர்தவந்தொடங்கக்கேட்டு
வையகமளித்தாடரைத வள்ளலைப்பணிந்துமானை
யையநின்றவததுக்கேவல் கொடியென்றளித்துப்போனான்.

மேகசூற்றிரவிபுரவிகள்போற் கடாவிடுகதேயாற்றித்தூற்றி, மந்தரமாமே னகருவித்து வழங்குகினுந் தொலையாதெனமருதவேலி.

(இ-ள்.) எப்பொழுதும் உழுவோர்கள் பதம்பார்த்து அறுத்துஅரிகளைச்சுமையாககொண்டுவரித தேவேந்திரனுலகத்தோடெண்டைசெய்ய எழுந்த மலையென்று சொல்லும்படியாகப்போர்போட்டுஆகாயவழியாகவருகிற சூரியனுடைய குதிரைகள்போலும்,கடாக்களைவிட்டுஅடித்துவைக்கோலை விலகத்தூற்றி மந்தரகிரிபோலக்குவியல்செய்து சருவமனிதர்களுக்குங் கொடுத்தாலும் நெல்குறையாது மருதநிலத்தில்-எ-று. (சஉ)

கயலினமென்றுழத்தியர்தங் கண்ணிழலைக்கண்டுகருங்கயல்வந்தேறும், அயலிவர்கொடும்புருவநிழலினைக்கண்டேசிலையெனவஞ்சிமீளும், மயலுதவுமாவதனந்தாமரைப்போதெனமருவி வண்டுசேரும், இயலும் வாசிநிழல் சண்பகப்போதெனவெருவியரியல்போகும்.

(இ-ள்.) வயலிற்களையெடுக்கிற பள்ளத்திகளுடைய கண்ணிழலைக்கண்டு சேற்கண்டைகள் நமயினமென்றுவந்துசேரும், பின்புஅந்தஇல அவர்களுடைய புருவநிழலைப்பார்த்து வில்லென்றுபயப்பட்டோடும்,ஆசையைக்கொடுக்கிற அவர்களுடையமுகத்தைத்தாமரைப்பூவென்று நினைத்துவண்டுகள்வந்துசேரும்-அதன்பின்பு அவர்களுடைய நாசியினிழலைப்பார்த்துச் சண்பகப்பூவென்று ஓடிப்போகும்-எ-று. (சங)

பெரும்பழனத்துழத்தியர்தங்களைகளை வராலெனப்போய்ப் பிடித்துப்பள்ளர், திருமபவுமங்கவர்புறங்கால் கமடமெனப்பிடி மருதத்திணைகடோறும், குரும்பையெனுமுலைச்சியர்கண்முகத்தினுக்கும் விழியினுக்குந்தோமென்று, சுரும்பினுடன்கலுழ்வன போற்றுமரையுங் குவளையுந்தேன் சொரியுமாதோ.

(இ-ள்.)பெரியவயல்களிற களையெடுக்கிற பள்ளத்திகளுடையகளைக்காலை வரால்மீனென்று பள்ளர்பிடித்து வெட்கத்தையடைந்துமறுபடியும் அந்தப்பெண்களுடைய புறங்காலை ஆமையென்றுபிடிக்கு மருதநிலந்தோறும் தென்னங்குரும்பைபோன்றமுலைகளையுடைய பெண்களது முகத்திற்கும், கண்ணுக்குந்தோற்றுப்போனோமென்று வண்டுடனே சொல்லியழுகிறதுபோல்தாமரைப்பூவும், நீலோற்பலமும்,தேனைச்சொரியும்-எ-று. (சச)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நிழலையுஞ்சுளிக்குமேதி நெடும்புனல்குடையவன்ன
மழலைவண்டானத்தோடு மருதவண்டானத்தோடு
மழலவிரமணிப்பூண்பள்ள ரரிகிணைக்கியையவூதுங்
குழலிசையறுகான்மாதர் குழலிசையறுகாற்கூட்டம்.

(இ-ள்.) எருமைகளிலேபோய் விழுந்துகலக்க அன்னம் இளமையாகிய நாரையுடனே மருதநிலத்தில் வாழ்ம்பொருந்திய தானத்தையுடைய சோலையில்நடும்பிரகாசம்பொருந்திய இரத்னாபரணங்களையுடைய பள்ளர்கள் அடிக்கின்ற அரிகிணையென்னும்வாத்தியத்திற்கு இசையும்படியாகஊதுகின்ற புல்லாங்குழலிசை இல்லாதபோது பெண்களுடைய கூந்தலிற்பொருந்தியவண்டுகள் இசையும்படியாகவூதும்-எ-று. (சரு)

தொண்டருடனாகமங்கள் சொன்னவிதிமுறைமையைத்
தனையடிமுடிவுசவுராதியாய்ப்பூசித்
தண்டர்பிரானைஞ்செழுத்தையோதியகமகிழ்ந்து
கொண்டகிரியையினர் கோடானகோடியே.

(இ-ள்.) அடியார்களோடு ஆகமங்கள் சொன்னவிதிமுறைப்படி சூரியன்முதல்சண்டேசுரா அந்தரயாகப்பூசைசெய்து தேவருக்கெல்லாமாகிய சிவனுடைய பஞ்சாக்ஷரமந்திரத்தையோதிமனது மகிழ்ந்து கிரியைகளை நடத்துகிறவர்கள் கோடானகோடி-எ-று. (ரு௪)

நேருமியம நியமாதனவகையும்
போபிராணாயாமம் பிரத்தியாகாரமொடு
தாரணையான சமாதிவகைதன்னினுமெய்
கூருமுயலியோகியாகள் கோடானகோடியே.

(இ-ள்.) இயமம்-நியமம்-ஆதனம்-பிராணாயாமம் பிரத்தியாகாரம்-தாரணை-தியானம-சமாதியென்று சொல்லப்பட்ட அஷ்டாங்க யோகங்களின் வகைகளையறிந்து அவைகளைத்தேகசிரமமபட்டுமுயல்கின்றயோகியர்கள் அனேககோடிப்பாகள்-எ-று. (ரு௫)

மாதவாகளினைசெயல் செய்யும்வகைபார்த்துச்
சூதவனஞ்சூழ்ந்த சுனையுஞ்சுனைசூழ்ந்த
சீதவருவிகளும் பார்த்துசிறப்புறுக
கோதமனாசிரமந் தனைநிறகுறுகினள்

(இ-ள்) மகத்தாகிய தவத்தினையுடையோர்கள் செய்யும் செய்கையைப்பார்த்து மாமரத்தோப்புச்சூழ்ந்த சுனையுஞ் சுனைசூழ்ந்த சீதளமான அருவிகளையும் பார்த்துசிறப்படைந்து அவவிடத்திலிராநின்றகௌதமருடைய ஆசிரமத்தில அமமைசோந்தாள்-எ-று. (ரு௬)

அந்தவிடத்துமையாள செலலவகலிகையு
மைந்தனுமவாதேதகினார் வாழ்த்திமறைகோதமனார்
முந்திமுனிவெவ்விடத்தே யென்றாள்முனிபுதல்வன்
தந்தைமலாதருபவைக் கொய்தியதுஞ்சாற்றினன்.

(இ-ள்.) அக்கௌதமருடைய இடத்திற்கு அம்மன்போனவுடனே அவருடைய பெண்சாதி அகலிகையும்புத்திரனாகிய சதானந்தரும்வந்து பணிந்தார்கள் அம்மன் ஆசீர்வதித்து வேதங்களையுணர்ந்தமுதன்மைபாமுனிவரான கௌதமர் எங்கேயிருக்கிறாரென்றுகேட்கச் சதானந்தரானவா தருப்பை கொண்டுவருகிறதற்குபபோனாரென்றுசொன்னார்-எ-று. (ரு௭)

பின்னுமவனுமைபபாள் பேதைமையேன்புன்குடிசில்
கன்னலமுந்த கனைப்போதிருந்தருளி
லன்னவனைக்கொணாவே னெனத்தேறயாடிதொழுது
தன்னையளித்தவனைபாற சென்றான்சதானந்தன.

(இ-ள்.) மறுபடியும்பார்வதியைப் பார்த்துகருப்பஞ்சாறுபோன்ற பார்வதியம்மையே அறியாமையுடைய என்குடிசைவீட்டில் கொஞ்சப்போது இருந்தால் என் தகப்பனைக் கொண்டுவருகிறேனென்று பாதங்களைத்தொழுதுதன்னைப்பெற்றவிடத்திற்குப் போனார்சதானந்தா-எ-று. (ரு௮)

இங்கிவன்செல்போதி லிளந்தருப்பைகொய்துமுனி
புங்கவர்கள்சூழ்ந்து வருமுனிவன்பூத்தலர்ந்து
துங்கவனக்கற்பகம்போ ன்றதலமிதவனந்
கங்களவனமல்லவென்றுசனகையுற்றுநோக்கினன்.

(இ-ள்) இந்தப்பிரகாரஞ்சதானந்தர்போகிறபோது இளமையாகிய தர்ப்பைகளைக்கொய்து அனேகமுனிவர்கள்சூழக்கௌதமர் வருகிறதற்குமுன்னே இவ்விடத்தில எல்லாவிருக்ஷங்களும் புஷ்பித்துக் கற்பகவிருட்சம்போலக்காணுகிறபடியினாலே நம்முடையவனமல்லவே இது - அருடையதென்றுசந்தேகப்பட்டுப்பார்த்தார்-எ-று. (ருக)

இத்தலத்தில்வந்தவா றென்றுரைத்துமாதவற்குப்
பதந்தருவந்த முனியும்பராசரனு
மத்திரியுமப்புதுமை யாராயுமெல்லையிற்றன்
புத்திரனைக்கண்டேயா னென்னபுகலென்றான்.

(இ-ள்) இந்த இடத்தில்வந்த பெரியோர்கள்யாதென்றுவிஷ்ணுவுக்கு பதத்தைப்பிரகாசஞ் சாபங்கொடுத்தபிருகுரிஷியும், பாராசரரும், அத்திரியென்பவரும், அப்புதுமை விசாரிக்குமிடத்தில் தம்முடையபிள்ளை சதானந்தனைக்கண்டு இவ்விடத்திலுண்டாகியவிசேஷம் என்னவென்று கேட்டார்கௌதமர்-எ-று. கலிவிருத்தம். ருஉ

தாதையிவைகேளிறைவர் தங்களையளிக்குஞ்
சோதியிவணெய்தினனெனத்தொழுதுசொன்னான்
றாதமறைதேடுமவனங்குடிசைமேவற்
கேதுதவமேதுதவ மேதுதவமென்றான்.

(இ-ள்) சதானந்தரானவர் தன்தகப்பனாரகியகௌதமனைப்பார்த்து பிரம்மாமுதலாகிய ஐவரையும் தன்னிடத்திலுண்டாகிய தேஜோமயமாகியபராசத்தி இவ்விடத்தில்வந்திருக்கிறாளென்று வணங்கிச்சொல்ல நாதசொரூபமாகிய வேதங்கள்தேடுதற்கரிய அம்மைநம்முடையகுடிசையில்வர என்னதவம்செய்தோமென்றார்கௌதமர்-எ-று. ருங

ஓடினனிணைத்துமக னுச்சியைமுகந்தா
னாடினன்மகிழ்ச்சியெனு மாழ்கடல்புகுந்தான்
பாடினனெடுத்தகுசை பார்மிசையெறிந்தான்
வீடினதுநந்தம்வினை வேரினுடனென்றான்,

(இ-ள்) கௌதமர் இந்தவார்த்தையைச்சொன்ன சதானந்தனைக் கட்டியணைத்து உச்சிமுகந்து ஓடினார் திருக்கூத்தாடினார் சந்தோஷமென்கிறசமுத்திரத்திலாழ்ந்தார் பாடினார் தருப்பையைப் பூமியிலேயெறிந்துவிட்டார் என்னுடையபாவம்வேருடனேகெட்டுப்போயிற்றென்றுசொன்னார்.

அத்திரிமுதற்றலைமை யந்தணர்களெல்லாங்
கைத்தலமெடுத்தனர் நடித்தனர்களிப்பால்
வித்தகியிருக்குமிட மேவியெதிர்கண்டார்
பத்திவலையிற்படு பதங்களில்விழுந்தார்

(இ-ள்) அத்திரிரிஷிமுதலாகத் தலைமைபெற்ற ரிஷிகளெல்லாம் இரண்டுகைகளையுந் தலைமேல்வைத்துக்கூத்தாடினார்கள் சந்தோஷத்துடன்

னே பார்வதியிருக்கிற இடத்தையடைந்து எதிரேகண்டு பத்தியாகிய வலையிலே அகப்பட்டுக்கொள்ளுகிற பார்வதியினுடைய பாதத்தில்வி ழுந்து நமஸ்கரித்தார்கள்-எ-று ௬௩

நின்னிலைமைகன்னியிறை நீள்பிரமசாரி
என்னுமுறையன்றுமுத லின்றுவரையெல்லா
முன்னிடையுதித்துல குயிர்த்தொகைக்கெல்லா
மன்னையெனுமுன்பெருமை யாரறியவல்லார்

(இ-ள்) தாயேநீயோகன்னிகைசுவ மியோநித்தியபிரமசாரியென்று சிருஷ்டிதொடங்கி இதுவரைக்கும்வேதங்களெல்லாஞ் சொல்லிக்கொ ண்டிருக்கின்றதுகளே அப்படியிருக்க உன்னிடத்தில் உலகங்களிலிரு க்கின்ற எல்லாவுயிர்களுந்தோன்றித்தாயென்றுசொல்லும் அப்படிப் உன்பெருமையை ஆரறியப்போகிறார்கள் எ-று ௬௪

நித்தனைமுதற்றருவை நித்தனிடத்தே
சத்தியெனநீவருவை சத்திசிவமென்றே
இத்தகைமைகொண்டுயிர்கள் யாவையுமளிப்பா
யத்துவிதமாகுமுனை யாரறியவல்லார்

(இ-ள்) நித்தியமாகவிருக்கிற சிவனை முதலில் உண்டாக்குவாய் அந் தசிவனிடத்திலே சத்தியாகவருவாய் சத்திசிவமென்கிற தன்மை யைக்கொண்டு உயிர்களையெல்லாம்பெறுவாய் அத்துவித சொரூபமா கிய உன்னையாரறியப்போகிறார்கள்-எ-று ௬௫

மெய்ப்பொருண்மகேசனரன் வேதனரியானால்
மைப்பருமகேசியுமை வாணிதிருவாவை
இப்படியுமன்றியவ னெப்படியெடுத்தா
னப்படியுமாவையுனை யாரறியவல்லார்

(இ-ள்) பரமசிவனானவர் மகேஸ்வரர் உருத்திரர் - பிரமா விஷ்ணு ஆனால் நீ மகேஸ்வரி-உருத்திரி-சரஸ்வதி-லட்சுமியாகிய சத்திகளாய் இப்படியுமல்லாமல் அந்தச்சிவன் எப்படிப்பட்ட உருவங்கொண்டா ரோ அதற்குத்தகுந்த உருவங்கொளவாய் உன்பெருமையை ஆரறியவ ல்லவர்கள்-எ-று ௬௬

நெஞ்சுருகிமாதவர்க ணின்றிவைபுகழ்ந்தார்
வஞ்சியிடைகோதமனும் வந்தனன்வரும்போ
தஞ்சலிபுரிந்தன னதற்குமுனமேயின்
கஞ்சமலரென்னவிரு கால்களில்விழுந்தான்

(இ-ள்)மகாதவத்தையுடையரிஷிகளெல்லாம் நெஞ்சமுருகி நின்று இப்படிதோத்திரஞ்செய்தார்கள் அந்தச்சமயத்தில் பார்வதி சமீபத்தி ல் கௌதமர்வரும்போதே இரண்டுகைகளையுந் தலையிலேவைத்துக்கூ ப்பித்தாமரைமலரையொத்த அம்மனது இரண்டு பாதத்திலும் நமஸ்க ரித்தான்-எ-று

அன்பினுயர்கோதமனு மன்னையையிறைஞ்சி
யின்புறவரைப்பனைய னெண்டிசைபரப்போர்

தன்சிரமிதிக்கரிய தாளிணைகளின்றென்
புன்றுடில்மிதிக்கவென புண்ணியமுடித்தேன்

(இ-ள்) பகதியினாலேஉயர்ந்த கௌதபரிஷியும்பார்வதியம்மனைவணங்கிச்சொல்வான் பிரமாஅஷ்டதிக்குப்பாலகா சிரசிலேவைத்தற்கு அருமையான பாதமிரண்டு மடியேனுடைய புன்மைபொருந்திய சிறுவீட்டில்மிதிக்க என்னபுண்ணியம் செய்தேனை-எ-று ௬அ

இந்தமொழிசொற்றவு மிளங்கொடியுமவேலன்
றந்தியினடசென்றிடுவணங்கதுதவிர்ந்தால்
சிந்தையமுன்னிடையில் வந்துகுறைதீரவேன்
மைந்தவெனவோதினன் மறுத்துமிவைசொல்வாள்

(இ-ள்) இந்தவார்த்தையைச்சொன்ன அளவில் இளமையாகியகொடிபோன்ற அம்மையும், பிள்ளையாகிய கௌதமனே எனக்கோர் குறைவந்தால் சுப்பிரமணியனிடத்திலும் கணபதியிடத்திலுஞ் சென்று தீர்த்துக்கொள்வேன் அவ்விடம்விட்டால் என்பேரில் அன்பு வைத்த உன்னிடத்தில்வந்து தீர்த்துக்கொள்வேனென்று சொல்லி மறுபடியுஞ்சொல்வாள்-எ-று ௬௯

நாயகன்மொழிந்திட நடந்தபடியெல்லாம்
பாயிரமெனும்படி பகர்ந்தனளெவர்க்குந்
தாயிவைமொழிந்தளவினிற்சதமகற்கன்
றாயிரம்விழிதந்தருளினிதருமுனிசொல்வான்

(இ-ள்) பரமசிவனானவர் சொன்னபடி பூமியில்வந்து தானடந்தசமாசாரமெல்லாம பாயிரத்தோடுகூடிய நூல்போல முறையாகவிரித்து எலருக்குந்தாயாகிய பார்வதிசொன்னபோது முன்காலத்தில் தேவேந்திரனுக்கு ஆயிரங்கண்ணுண்டாகச் செய்த கௌதமர்சொல்வார் என்றவாறு ௭௰

இத்தலமுதற்றலமிதன்பெயர்தலேச்சு
முத்தமமிதிற்றரு மொன்றுபலவாகும்
மெய்த்தவமியற்றியிடில் வெள்விடையின்மேல்வந்
தத்தனுமிடப்புற மளித்தருளுமென்றார்

(இ-ள்) இந்தஸ்தலம் முதன்மையானஸ்தலம் இதனுடையபேர் தலேச்சுரம் இதுமிகவுமுத்தமமானது இதில் ஒருபுண்ணியத்தைச்செய்தால் ஒன்றுபலவாய் விருத்தியாகும் இதிலிருந்து கொண்டு நீமெய்மையாகிய தவஞ்செய்தால் வெண்மைபொருந்திய ரிஷப வாகனத்தின் மேலெழுந்தருளிப்பரமசிவன் உனக்குஇடப்பாகம்கொடுப்பரென்றார் கௌதமர்-எ-று ௭௧

மாலயன்வசுக்கண் மகவான்முனிகணத்தோர்
சாலைகள்சமைத்ததில் தனித்தவமுடித்தார்
காலமிடகன்றுசெயல் கைப்பலமிதென்றான்
மூலமுதல்வல்லியு முடிப்பணிதுவென்றாள்

(இ-ள்) வாராய்அம்மையே விஷ்ணுபிரமா அஷ்டவசுக்கள் தேவேந்திரன் அனேகமுனிவர்கள் அவரவர்கள் இடஞ்செய்துகொண்டு ஒப்பற்றதவஞ்செய்து நினைத்தகாரிய முடித்துக் கொண்டார்கள் நீவந்த

காலமு மிட முநன்மையாகும் இவ்விடத்தில் நீதவஞ்செய்தால்கைகப்ப
லமாகி முடியுமென்று கௌதமர்சொல்ல எல்லாப்பொருளுக்கு மூல
மாகிய அம்மனும்தவசுசெய்து என் கருத்தைமுடித்துக்கொளளுகிறே
னென்றுள்-எ-று கஉ

எண்சீரடி ஆசிரியவிருத்தம்

கோதமனேமுதலாய முனிவர்கட்கெல்லாங் குளிர்ந்தமொழி பு
ந்துவிடை கொடுத்துச்சோணை பூதாமாமதன் குணபாற்பன்னசாலை
திதமைப்பித்தகமகிழ்ந்து புறம்புகாக்க, மாதரொழு வயிரவர்கள் காத்து நா
லுபாலின் வாயிலையெண் வயிரவர்கண் மகிழ்ந்துகாக்க, வாதாவினிரு
த்திமைந்தர் மருங்குகாக்க வந்தரியுட்புறங்காக்க வமைத்தாள்மன்னோ

(இ-ள்) கௌதமாமுதலான முனிவர்க்கெல்லாம் பிரியவசனஞ்சொ
ல்லி உத்தரவுகொடுத்து அருணாசலத்துக்குக் கிழக்குப்பக்கத்தில்பன்
னசாலை புதிதாகச்செய்வித்து சத்தமாதர்களைப் புறக் காவலாகவைத்
து நான்குவாசலையும் எட்டுவயிரவர்களகாக்கவும் விநாயகர் சுப்பிரம
ணியா தன் இரண்டுபக்கமுங்காக்கவும் துர்க்கை உட்பக்கங் காக்கவுஞ்
செய்தாள் பார்வதி-எ-று கங

கொந்தளகஞ்சடைபிடித்துவிரித்துப்பொற்றோட் குழைகழுத்தி
ற்கண்டிகையின் குப்பைபூட்டி, யுந்துமாவுரிகிகர்படடாடை நீக்கியுரித்
தமாவுரிசாத்தியுத்தரளத்தால், விக்கைதிருநீறணிந்து கனற்குட்காய்ந்
துவிளங்குமூசியினொருகால்விரலையூன்றி, அந்திபகலிறைபதத்தின் ம
னமையூன்றியரியபெருந்தவம்புரிந்தா ளகிலமீன்றுள்

(இ-ள்) புஷ்பங்களைத்தரிக்கின்ற கூந்தலைச் சடைசெய்து விரித்துத்
தோளகழுத்து காதுகளில் ருத்திராட்ச மாலைகளைத்தரித்து ஆடுகின்ற
பாமபுரிபோலிருக்கிற பட்டாடை யுடுத்துகிறதுவிட்டு மாவுரிதரித்து
செயதலைக்கொடுக்கின்ற விபூதியைச் சருவாங்கமுந்தரித்து நெருப்பி
ல்காய்ந்து பளபளவென்று பிரகாசிக்கும ஊசியில் ஒருகாற் பெருவிர
லையூன்றிக்கொண்டு இராப்பகல் மனதிலே பரமசிவனைத் தியானமா
கநிறுத்தி அரிதாகிய பெரியதவத்தைச்செய்தாள் உலகத்தைப்பெற்ற
பார்வதியம்மன்-எ-று கச

இளைத்தகொடி மருங்குவளைந் தெரியினுப்ப ணினியதவ மியற்று
தலைகண்டிளைத்துவாடிக் களைத்துமனந்துடித்துவிழி புதைத்துவாணி
கண்ணீரின் மூழ்கின்றுள் கமலத்தாளு, முளைத்துமனந் தளர்ந்த
ழுதுவிழுந்தாண்மற்றை யுயிர்களெல்லாங்கரைந்துகரைந்துருகாநின்ற,
விளைத்துவளைத்துரைப்பதென்றுய் வருந்துமாளுல் வயிற்றினுள்ள க
ருப்பமெல்லாம் வருந்திடாதோ

(இ-ள்) மிகவுஞ்சிறிதாகிய கொடிபோன்ற இடையானது வளைந்து
அக்கினிமத்தியிலே இனிமையான தவத்தைச்செய்கிறதைப் பார்த்துப்
பார்த்து இளைத்துவாட்டத்தையடைந்து களைத்துமனதுதுடித்து இர
ண்டுகண்களையுமூடிக்கொண்டு சரஸ்வதியானவள் கண்ணீரால்முழு
கினுள் இலட்சுமியானவள் மனதுவருந்திச் சஞ்சலப்பட்டு அழுது
விழுந்தாள் மற்றசீவராசிகளெல்லாம் மனங்கரைந்து உருகியதுகள் நா
விளைத்துப்பிரித்துச் சொல்லுகிறல் என்னபயன் தாயானவள் வருந்து

வாளாயின் வயிற்றிலுள்ளகருவாகிய சீவனெல்லாம் வருத்தத்தை ய டையாதோ-எ-று ௭௫

முன்பனியிற்கருகுபடாக்கமலம்போல முகந்தோன்றப் பனிகய த்துண் மூழ்கிநிற்கும், பின்பனியிலதிசீதவிடத்திற்சேரும்பெருமழை க்குமீனென்னப் பேணிநிற்கும், அன்பனிடம் பெறுமளவு மிது ...ால் வேண்டு மரியதவமபுரிந்தனளவ்விடத்துவேந்தன், வன்பனி ...ற்றுயினெடுமான்முதலாந் தேவர்மறைபுகுந்ததவச சாலை மருங்கிற் சார்ந்தார்

(இ-ள்) முன்பனிக்காலத்திலே கருகிப்போகாத தாமரைப்பூப்போ லமுகமாத்திரந்தெரியக்குளிர்சியபொருந்திய தடாகங்களிலே நின்றும் பின்பனிக்காலத்திலே அதிகசீதளம்பொருந்திய இடத்திலேயிருந்தும மழைபெய்கிறபோது அதில் ஒருமீன்போலச்சஞ்சலப்படாது நின்றும் பரமசிவன் இடப்பாகத்தைப் பெறுகிறவரைக்கு மிதுபோலவேண்டி யதவத்தைச்செய்தாள் அந்தவிடத்தில் பிரமதேவனும வலிய சர்ப்பத் தில நித்திரைசெய்கின்ற விஷ்ணுமுதலாகிய தேவர்களும் தேவகோ ஷ்டம்பொருந்திய தவச்சாலையைவந்து அடைந்தார்கள்-எ-று ௭௬

அந்தரியுமாயவனா முதலாந்தேவ ரனைவருக்கு முபசார மளித் துநீங்கள், வந்தவாவியம்புமென மகிடனாலேவருந்தியதுந் தளர்ந்தது வும் வகுத்துச்சென்னா, சுந்தரியுங்குமரியுடன் சுடரும்வாளாற்செரு டுகளத்தின் மகிடனாரைத்தொலைப்பாயென்றாள், விரதையதுபுரிவனை னப் பணிந்தாளன்னை விளம்புதல்கண் டகமகிழ்ந்து விடைகொண் டாரே

(இ-ள்) பார்வதியானவள் விஷ்ணுமுதலான தேவர்களெல்லாருக்கு முபசாரஞ்சொல்லி நீங்களிவ்விடத்திற்குவந்தவகைசொல்லுங்களென் றுகேட்க அவர்கள் மகிடாசுரனாலே தாங்கள்துன்பப்பட்டுத் தளர்ச்சி யடைந்தவகை விபரமாகச்சொன்னார்கள் அதற்குப்பார்வதியானவள் துர்க்கையைக்கூப்பிட்டு நீகத்தியினாலே யுத்தகளத்திலே மகிடாசுர ன்வல்லமைகெடக் கொன்றுவிடென்றுசொன்னாள் அதற்குத் துர்க் கை அப்படியே செய்வேனென்றுபணிந்தாள்தாயாகியபார்வதி இந்த வார்த்தையைச்சொன்ன அளவில் விஷ்ணுமுதலானவர்கள் சந்தோஷ த்தையடைந்து வணங்கி விடைபெற்றுக்கொண்டார்கள் எ-று ௭௭

கலிவிருத்தம்

கோதமாச்சிரமந் தனினிற்கோல்வளை
தீதிலாததவஞ் செய்ததுசெப்பினேன்
மேதிமாமுகற் காய்ந்ததும்வெள்விடைச்
சோதிபாகமடைந்ததுஞ்சொல்லுவேன்

(இ-ள்) சத்திதேவியானவள் கௌதமருடைய ஆசிரமத்தில் குறை வில்லாத தவத்தைச்செய்ததுசொன்னேன் பிறயாடு மகிடாசுரனைக் கொன்றதும், ரிஷபவாகனத்தையுடைய சிவனுடையஇடப்பாகத்தை ப்பார்வதியார் அடைந்ததுஞ்சொல்லுவேன்-எ-று ௭௮

நான்காவது-திருக்கண்புதைத்தசருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௩௩௨.



உ

சிவமயம்.

ஐந்தாவது

பார்வதியார்

# இடப்பாகம்பெற்றசருக்கம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அஞ்சனக்கிரியில்வாழு மசுரன்றனக்குந்தீ
னஞ்சமேயனையானந்த நமனுக்குநமனாயவந்தோன்
செஞ்சிகையெரியைத்தீய்க்கும் தீமையானளகைநாட்டின்
விஞ்சையான்வருந்தவுள்ள வளமெலாங்கவர்ந்தவீரன்

(இ-ள்) நீலகிரியில் வாசஞ்செய்துகொண்டிருக்கிற அசுரனவன் எல்லாரிலும் அதிகபராக்கிரமத்தையுடையவன் விஷத்திற்குச்சமானமானவன் அந்தயமனுக்கும் யமனானவன் சிவபாகிமேலேயெழுகிற கொழுந்தையுடைய நெருப்பைச்சுடத்தகுந்த தீமையையுடையவன் அளகாபுரியில் குபேரன் தரித்திரத்தையடைய அங்கேயிருக்கிறவளங்களெல்லாங் கொள்ளையிட்டவன்-எ-று

தாமரைக்கண்ணன்றங்கு மாவினைத்தலைவால்கூட்டி
மாமணிக்கவண்போற்கொள்வன் வாணிவாகனத்தைவாங்கி
வேமழற்குஞ்சிமைந்தர்க் குதவுமன்விமானத்தோடே
சோமனைபபிடித்துக்கையாற பிழிந்துமூசருந்துமசூரன்

(இ-ள்) விஷ்ணுவிற்கிரைசெய்கின்ற ஆதிசேடனைத்தலையையும், வாலையும் ஒருகையினாலே சேர்த்துப்பிடித்து அதன் சிரமணியைக் கவணிலேவைத்தெறிந்து விளையாடுவான் அக்கினியைத்தானிவிட்டு அவனேறுகின்ற ஆட்டை நெருப்பைப்போலச சிவப்புமயிரையுடைய தன்பிள்ளைகளுக்கு ஏறக்கொடுப்பான் சந்திரனை அவனேறுகிறவிமானத்தோடே கையினாலே பிடித்துப்பிழிந்து அவனுடம்பிலிருந்துவருகிற தேவாமிர்தத்தைப்பானம்பண்ணுகிறவனா-எ-று உ

கருதியமகவான்வெள்ளைக் களிற்றின்மேற்றிரிவன்பின்னைப்
பரிதிதேர்தனிற்பசசைப் பரிசெலப்பவனிபோவா
னிருதியைச்சுமக்குமாளி யேறுவனிணங்கின்மூழ்கிக்
குருதிகொப்பளிக்கும் வாளென் றெடுத்துயிரனைத்துங்கொல்வான்

(இ-ள்) உயர்வாக நினைக்கப்பட்ட தேவேந்திரனுடைய வெள்ளையானைமேல் திருவோலக்கம்வருவான் சூரியனுடைய தேரிலேறிக்கொண்டு பச்சைக்குதிரைகளேழும் நடக்கப் பவனியாகப்போவான் நிருதியைச சுமக்கின்ற ஆளியின்மேலேறிக்கொள்வான் நிணங்களாலே முழுகப்பட்டு இரத்தங்களைக்கொப்பளிக்கும் ஒருவாளாயுதமெடுத்து சருவத்திரசீவஙகளையும் கொல்வான்-எ-று ௩

அன்னவன்மகிடமான வாயிலைஞ்சிக்காலத்
தென்னவன்மகிடமேறுன் கானிறைறிரிந்தானென்று
லென்னவன்கொடுமைநமமா லியம்பலாமிலகுசோதி
மன்னவன்கிரியைச்சாய்த்தான் மீனுக்காவாரிதூர்த்தான்

(இ-ள்) அப்படிப்பட்ட அசுரன் எருமைமாட்டு முகத்தையுடையவனாபடியினாலே தெற்குத்திக்கிலிருக்கின்ற யமனுடைய எருமைக்கடாவின்மேலுமேறிக் காலினால்நடந்து திரிந்தானென்றால் அந்த மகிடாசூரனுடைய கொடுமை நம்மாலேப்படிச்சொல்லக்கூடும் சோதிசொரூபமாகிய சிவனிருக்கிற கைலாயத்தையுஞ் சாயச்செய்தான் மீன் வேண்டியதற்காகச் சமுத்திரத்தையுந் தூர்த்தான்-எ-று ௪

மயனெனுந்தச்சன்செய்த மகிடமாபுரத்திலன்று
ணயனறுகரிசில்க விருக்குநாளவனுக்காய
பயனுறுநுகர்ச்சிவேண்டி யாயிரமபடைக்கையாளர்
கயமுதல்விலங்கைநாடி வேட்டையாகக் னிறசென்றார்

(இ-ள்) மயனென்கிற தேவதச்சனால் இரத்தினக்சிதமாகச் செய்யப்பட்ட மகிடபுரத்தில் அந்தஅசுரன் பிரமாவானவர் நித்தியம் அறுகும் அட்சதையுங்கொடுக்க வாழ்ந்துகொண்டிருக்கிறநாளில் அந்த அசுரன் தின்னுகிற மாமிசத்துக்காக ஆயுதபாணிகளாகிய ஆயிரம் பேர்கள் யானைமுதலாகிய மிருகங்களைத்தேடி வேட்டைமார்க்கமாகக் காட்டுக்குப்போனார்கள்-எ-று ௫

தானவர்சென்றுவஞ்சிதவஞ்செய்கானகத்தைச்சூழ
வானவர்பணியுமட்டவயிரவாதொகைதகாரா
போனவாறிந்தவாறுமபுரிசூழற்றவருமதூத
ரானவருவுணாகோவுக்கடிபணிந்தறிவித்தார்கள்.

(இ-ள்.) அப்படி வேட்டையாட வெளிப்பட்ட ஆயிரமசுரர்களும் வந்து பார்வதி தவஞ்செய்துகொண்டிருக்கிற வனத்தைச்சுற்றிக்கொண்டார்கள் அதைக்கண்டு தேவர்கள் பணிகின்றகாவலாகவிருந்து அஷ்டவயிரவர்களும் அந்தஆயிரம்பேரையுங்கொன்றார்கள் அவர்கள் இறந்துபோனதும் அம்மன் தவசுபண்ணுகிறதும் பாதத்தைவணங்கித்தூதர்கள் மகிடாசூரனுக்குத்தெரிவித்தார்கள்-எ-று. ௬

போற்றிபக்கவர்கள்சொல்லப் புகைநகைபிறந்ததங்கி
தூற்றியவி நகணண்ட கோளமுஞ்சுழன்றதங்கே
நாற்றிசையுள்ளவேழ நடுங்கியதிமையோர்கூட்டங்
கூற்றமுங்கரந்ததால காலமுங்குளிர்ந்ததன்றே

(இ-ள்) தூதர்கள்வணங்கித்தெரிவித்தஅளவில் புகையும் சிரிப்புமுண்டானது இரண்டுகண்களும் நெருப்புகளைப் பறக்கவீசியதுகள் அண்டகோளமுமகிழுங்கிறெனச்சுழன்றது அஷ்டதிக்கிலிருக்கிறயானைகளும் தலையைத்தொங்கப் போட்டதுகள் தேவர்கூட்டம நடுக்கத்தையடைந்தது யமனும்ஒளிந்துக்கொண்டான் ஆலகாலவிஷமும் குளிர்ச்சியடைந்தது-எ-று ௭

அப்படிமகிடன்சீறு மளவினிகும்பனென்போன்
செப்பிமுனதுகோபம் பொறுப்பரோசிறியரென்றே
முப்புடையிளநீரென்ன முலைச்சிவாழ்வனத்துளாரைக்
கைப்படையதனாற்கொல்வேனெனச்சொலிக்கடிதுபோனான்.

(இ-ள்) அந்தப்பிரகாரம் மகிடசூரன் கோபிக்குமளவில் நிகும்பாசூரனென்கிற படைத்தலைவனவாருமையாராசனே உமதுடையகோபத்தை அற்பமாகியவர்களாா பொறுப்பார்கள் என்றுசொல்லித் தென்னிளநீர் போலத்தனத்தையுடைய பார்வதிதவஞ்செய்கிற வனத்திலிருப்போரைக் கையிலிருக்கின்றவாளால் கொன்றுவருகிறேனென்று சீக்கிரத்தில் புறப்பட்டுப்போனான் எ-று ௮

குடதிசைக்கடலைசசீறிக் குணதிசைக்கடல்சென்றன்ன
கொடியதேர்கரிமாசேனை யெழுந்தனனிகும்பனென்போன்
வடகிரிதனக்குங்கும்ப மாமுனிமலைக்குநேரே
இடைபொருகரியமேரு வெழுந்ததாமெனச்சென்றான்.

(இ-ள்)மேற்குச்சமுத்திரத்தின் மேற்கோபித்துக் கிழக்குக்கடல்சண்டைசெய்யப் புறப்பட்டதுபோல் பெரியதேர்களும் யானைகளும குதிரைகளும காலாள்களும் புறப்பட்டதுகள் நிகும்பாசூரனனவன் மகாமேருவுக்கும் அகஸ்தியரிருக்கின்ற பொதியமாமலைக்கு மத்தியிலே நிறைந்த ஒருபெரியமேகு எழுந்ததென்று சொல்லும்படியாகப் போனான-எ-று

அறுசீரடியாசிரியவிருத்தம்-வேற்றுவண்ணம்

எழுந்தவனுமரகதநேர் துரகதமாயிரம்பூண்ட விரதமேறி,வழிந்த கரிமதக்கடலை யெழுந்ததுகளடக்கவுமை வனத்திற்சென்றான், கொழுந்துவிடுகனலனையாயாவரவுகண்டுபலகோடி குன்றம்வீசி,தழைந்த நீத்தாக்கணங்குநோக்கணந்தம் பொருதெதிரே தடுத்தாரன்றே-

இ-ள் இங்கப்பிரகாரம நிதம்பாசுரன் பச்சைக்குதிரை ஆயிரங்கட்டியதேரிலேறிக்கொண்டு அப்பொழுது எழும்பிய சிறுஅணுக்கள் முன்போகாநின்ற யானைகளின்மதஜலம் சமுத்திரமாகத் தேங்கியிருப்பதை வறளச்செய்ய பார்வதிதவஞ்செய்யும் வனத்திற்குப்போனான் கொழுந்துவிட்டெரியும் நெருப்பொத்த அசுரப்படைகள் அநேகமலைகள்விட்டெறிய இவர்கள்வருகிறதுகண்டு அம்மனிடத்திலிருக்கிற தாக்கணங்கு நோக்கணங்கு என்னுமிருவரும் ஆயுதபாணிகளாகப்போய எதிரேதடுத்தார்கள்-எ-று ய

சண்டனுருத்திரன்சோமன் கபாலிகர்சங்கரன் கோதண்டன் வீதன், ஒண்டரியசித்திராங் கதனென்னும்வயிரவர்களிருநால்வோரு, மண்டமுகடுடையநகத் தானைகளைத்தொலைத்திட்ட வரிகளபோலக், கண்டகனுஞ்சாரதியுந் தேருமன்றிச சேனையெல்லாங் கணத்திற்சாய்த்தார்.

(இ-ள்)சண்டன்ருத்திரன்சோமன் கபாலிதனக்குத்தானே ஒத்தசங்கரன் கோதண்டன் வீதன் சித்திராங்கதன் இவ்வெட்டுவயிரவர்களும் அண்டகோளமுடைபட யானைகளைக்கொல்லுகிற சிங்கங்கள்போலகர்சித்துநிதம்பாசுரனும் அவன்சாரதியும்தேருந்தவிரமற்றச்சேனைகளையெல்லாம நொடிப்பொழுதிலேகொன்றார்கள். கக

அட்டவயிரவர்படையா லணங்குகளாற்றனது படையழிதலுநோக்கி,வட்டநெடுந்தேர் முடுக்கித் தாக்கணங்கின் முகத்திலெண்ணிலவாளிகோத்தான், விட்டகணைகளைவிலக்கித் தேரோட்டுஞ்சாரதியை வீழ்த்திவாளி, தொட்டகரங்களைப்பிடுங்கி யவனுயிரைக்குடித்தந்தச்சூரமாது.

(இ-ள்)எட்டுவயிரவர்களுடைய ஆயுதங்களினாலும் இரண்டுபெண்களாலும் தன்னுடையபடைமுழுவதும் இறந்துபோகின்றதைப்பார்த்து நிதும்பாசுரன் வட்டமாகிய நெடியதேரைவிட்டுக் கொண்டு தாக்கணங்கென்பவளுடைய முகத்திலேகணக்கில்லாத பாணங்களைவிட்டான் அந்தபாணங்களைவிலக்கித்தேர்நடத்துகிறசாரதியைகொன்று அம்புதொடுத்தகைகளையறுத்து அவனுடையதலையையும் அறுத்துக் கொன்றாள் தாக்கணங்கு-எ-று கஉ

ஓடினசெங்குருதிநதியுடலிழந்துவிழுமவுணருயிர்கள் போல,வாடினவெண்குறைத்தலைக ளனுதினமுமருந்துகின்ற வலகைபோலச்,கூடினர்கள்வயிரவரும் தாக்கணங்கு நோக்கணங்கும் அம்பைவாகை,வீடினர்க ளவுணரென மகிடமுகற் குரைத்தனர்போயவிரைந்துதூதர்,

(இ-ள்.) வயிரவர்களாலும் இந்த இரண்டுபெண்களாலும் தேகமறுபட்டுசீக்கிரத்திறபோகுமசுரருயிர்போல் இரத்தநதியானது ஓடியது அதிதப்பம்மாமிசத்தைத்தின்று கூத்தாடுகிறபேய்போல்கவந்தங்கள் கூத்தாடியது அவ்வயிரவர்முதலாகியவர்கள் தும்பைவாகைமாலை சூடிக்கொண்டார்கள் அசுரர்களிறந்துபோனார்களென்று மகிடாசுரனுக்குத்தூதர்கள் சீக்கிரத்திற்போய்ச்சொன்னார்கள்—எ-று. (௰௩)

கேட்டனன் மகிடமூகன் கயிடவன் றன்முகநோக்கி இளை
வானோர், காட்டிலுறைசிறுபேயுஞ் சனவருநமபெரும்படையைக் கடி
கதுவென்றால், நாட்டநுதலயனரியுமனைக நினிமேற்றிறைகொடுக்க வ
னுவாரோ, நீட்டினகைபுரிக்கெழுந்தான் மேற்றினனுயிரக்கரிசூழ்ரத
மீதில்.

(இ-ள்.) மகிடாசுரன் இந்தவார்த்தையைக்கேட்ட அளவில் தன்னருகிலிருக்குங்கயிடவன் முகத்தைப்பார்த்துச்சொல்வான் ஒருகாட்டிறசஞ்சரிக்கின்றசிறியபேய்களும் சனங்களும் நம்முடைய பெரியசேனைகளைக் கொன்றதுகளென்றால் சிவன் பிர்மா விஷ்ணுமுதலானவர்கள் சொன்னபடிகேட்பார்களோவென்று அதிகமாகியநகைகொண்டு எழுந்திருந்து ஆயிரம்யானைகளைகட்டியதேரிலேறிக்கொண்டான்—எ-று. (௰௪)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பதினொருகோடியானைப் பலத்தாய்க்காந்தநீலன்
மூதுகான்குருதியண்டனீசகன்சண்டன்முண்டன்
மதுகயிடவன்றீக்கண்ணன் புகைக்கண்ணன்மாலியென்றும்
தகுகொளாரிரண்டுபேருந் தேர்களைத்தூண்டிச்சென்றார்.

(இ-ள்.) மகிடாசுரன்தேரின்மேலேறினவுடனே பதினொருகோடியானைப் பலத்தையுடையவர்களாகியகாந்தன்-நீலன்-மூதுகான்-குருதி-அண்டன்-நீசன்-சண்டன்-முண்டன்-மதுகயிடவன்-தீக்கண்ணன்-புகைக்கண்ணன்-மாலியென்று-சொல்லப்பட்ட பன்னிருவரும் தங்கள் தங்களிரதங்களை நடத்திக்கொண்டுபோனார்—எ-று. (௰௫)

கரிமுகத்தவர்நிவாதகவசர்கள்காலகேயர்
பரிமுகத்தவுணர்மேதிப் பணைமுகத்தவர்கள்பற்றி
எரிமுகத்தவுணர்சீறியெழுமபுலிமுகத்துக்களவ
ரரிமுகத்தவுணர்வெள்ள மாயிரஞ்சென்றவன்றே.

(இ-ள்.) யானைமுகத்தையுடையவர்கள்-நிவாதகவசர்கள் காலகேயர்கள்-குதிரைமுகத்தையுடையவர்கள் எருமைமாட்டுமுகத்தையுடையவர்கள் நெருப்பெரிந்துகொண்டிருக்கிறமுகத்தையுடையவர்கள் புலிமுகத்தையுடையவர்கள் சிங்கமுகத்தையுடையவர்களாகிய அசுரர்கூடிய ஆயிரம்வெள்ளம்நடந்ததுகள்—எ-று. (௰௬)

பாய்பரியதனிற்பாதி பரிகளிற்கரிகள்பாதி
காய்கரியதனிற்பாதி கடும்பரிக்கொடுந்தேர்செல்லப்
பேய்கருங்கொடிகளாடப் பிணங்கிவெண்கொடிகளாட
வேயகளப்பறைகளார்ப்பக் குறுகிலன்விகைதகாளில்;

(இ-ள்.) இப்படி ஆயிரம்வெள்ளங்காலாள்கள் புறப்பட்டவுடனே ஐந்நூறுவெள்ளங்குதிரையும் இருநூற்றைம்பதுவெள்ளம்யானையும் நூற்றிருபத்தைந்துவெள்ளம்தேருமாகப் பேய்களும்காக்கைக்கூட்டமும்விருந்தாம்படியென்றுகளித்துக்கூத்தாட வெள்ளைக்கொடிகளாடப்புள்ளாங்குழல்பேரிகைமுதலானதுகளெல்லாமுழங்கமகிடாசுரன் அம்மனிருக்கிறகோட்டைவந்துசேர்ந்தான்—எ-று. (௰எ)

அடலவன்வரக்கண்டஞ்சி யடைந்துமைக்கபயமென்று
மடருறுமுனிவர்கூற வுமையவள்பயங்கெடுத்து
விடலுடனருகுநின்ற விந்தையைவிரும்பிநோக்கி
கடகமொண்டானடுதிவாயென்றாள்விடைகொடுபெயர்ந்தாள்கன்னி

(இ-ள்.) வல்லமைபொருந்தியமகிடாசுரன் வருகிறதைப்பார்த்துப்பயப்பட்டுஓடிவந்துபார்வதிக்கு அபயமென்றுமுனிவர்கள் முறையிட்டுச்சொல்லஅம்மனானவள் அவர்களுடையபயங்களைத்தீர்த்துத் தன்சமீபத்தில்நின்றபெருமைபொருந்தியதுர்க்கையைப்பார்த்து உன்னுடையகத்தியினாலேஅந்தஅசுரனைக்கொன்றுவிடென்றுசொல்ல உத்தரவுபெற்றுப்புறப்பட்டாள்துர்க்கை—எ-று. (௰அ)

ஆளிமேற்கன்னிசெல்ல வருணனாயகிமுன்செல்லக்
காளிதுந்துமிபின்செல்லச் சுந்தரிகணங்கள்செல்ல
ஞாளிமேல்வடுகர்செல்ல நான்முகிமுதலாமாதர்
தாளிமேற்செல்லத்தங்கள் விடையின்மேற்றாசிசென்றார்.

(இ-ள்.) துர்க்கையானவள் ஆளிவாகனத்திலேறிக்கொண்டுபோக அருணநாயகியென்பவள்முன்னேபோகவும் காளிதுந்துமிஎன்கிற இருவரும்பின்னேபோகவும் பார்வதியினதுகணங்களும் சுவானவாகனத்தில்வயிரவர்போகவும் அபிராமிமுதலாகியமாதரெழுவரும்தங்கள் தங்கள்வாகனங்களேறிக்கொண்டு தாசிப்படையாகத் துகளெழும்பப் போனார்கள்—எ-று. (௰௯)

சென்றிதோமரத்திற்குன்றிற் சிலைகளிற்படையிற்கையிற்
கன்றிடமகிடன்சேனைப் பாதியைக்கணத்திற்சாய்த்தார்
வன்றிறன்மகிடன்சேனைத் தலைவருமகிடன்றானுங்
குன்றெனவெதிர்த்துக்கன்னி படையெலாந்துரத்திக்கொன்றார்.

(இ-ள்.) இப்படி துர்க்கைசேனைகள்போனவுடனே உலக்கையினாலும்மலைகளாலும்வில்முதலாகிய ஆயுதங்களாலும் கைகளினாலும் கோபத்துடனேபோர்செய்கிறமகிடாசுரனுடையபாதிசேனையை ஒருநொடிப்பொழுதிலேகொன்றுவிட்டார்கள் மகிடாசுரனும் அவனுடையசேனைத்தலைவர்களும் மலைபோலெதிர்த்து துர்க்கையின்சேனைகளையெல்லாந் துரத்திக்கொன்றுவென்றார்கள்—எ-று. (௨௰)

துந்துமிமுதலாங்காளி ரிடைத்தனர்சூலியானை
சுந்தரிவராகியோடு முகத்தடிதிரிக்கையோ
ளிகிரியமறைபாளொன்று மெழுவருமறைந்தார்ஞானி
யுந்தினாரிடைந்தார்கன்னி றந்தளர்ந்துமையையென்றாள்.

(இ-ள்.) அசுரனது படைகளை நிர்த்துயுத்தஞ்செய்த அளவில் துந்துமி-காளிமதங்கி-சண்டி-என்கிறநான்கு சத்திகளும் தோற்றார்கள்-சூலி-நீலகண்டி-வாராகி-சண்முகி-திகிரிக்கையாள்-இந்திரையமையாளென்கிற ஏழுமாதரும் யுத்தஞ்செய்யமாட்டாமற் காட்டிலொளித்தார்கள் சுவானவாகனத்தையுடைய வயிரவர்களுந் தோற்றார்கள் ஆர்க்கையானவள் மாத்தளர்ந்து உமாதேவியேயென்று தியானித்து நின்றாள்—எ-று.

உறுதுணையுமையேயென்னும் பொழுதில்யோகினிகள்வானி
லறுபத்துநாலுகோடி யதிர்த்தெழுந்தழலின்மாரி
இறுதியாயருளசசேனை யிடிமழைசொரிகையாலே
குறுகியமகிடன்சேனைத் தலைவருங்கொதித்துச்சென்றார்.

(இ-ள்.) ஆர்க்கையானவள் அம்மனே துணையென்றபோது அறுபத்துநான்குகோடியோகினிகள் ஆகாசத்திலார்ப்பரித்தெழுந்து நெருப்புமழையையும் இடிமழையையும் சொரிந்தபடியினாலே மகிடாசுரனுடைய சேனைகளெரிந்துபோனதுகள் அப்பொழுது சேனைத்தலைவர்கள் கோபித்துச்சண்டைசெய்தார்கள்—எ-று. (௨௨)

கலிவிருத்தம்.

அருசிகன்றனைச் சென்றனளாரணி
மருவுகாந்தனை மாய்த்தனள்வாரணி
காணைவென்றனள் வேலுடைக்காரணி
காகனுருயி ருண்டனளாரணி.

(இ-ள்.) அப்படி மகிடாசுரனுடைய சேனைத்தலைவர்கள் எதிர்த்தவுடனே அபிராமியென்பவள் அருசிகனென்பவனைக்கொன்றாள் வாரணியென்பவள் காந்தனென்பவனைக்கொன்றாள் சண்முகியென்பவள் காணனென்னும் அசுரனைக்கொன்றாள் காரணி காகனென்னும் அசுரனைக்கொன்றாள்—எ-று. (௨௩)

சூலபாணி தொலைத்தனன் மிண்டனைக்
கோலமாமுகி சண்டனைக்கொன்றன
ளாலவூணி மதுவையழித்தன
ணீலனுருயி ரிந்திரைநீங்கினள்.

(இ-ள்.) சூலக்கையாளென்பவள் மிண்டனென்பவனையும் வராகி சண்டனென்பவனையும் நீலகண்டி மதுவென்னுமசுரனையும் இந்திரை நீலனென்பவனையுங்கொன்றார்கள்—எ-று. (௨௪)

துந்துமிக்கொடி சோணிதவூணனை
தந்துமிக்கும் படிக்கதைசாட்டினள்
நந்துமிக்க நிகர்க்கருணாசலை
வந்துமிக்கெரிக் கண்ணனைவாட்டினள்.

(இ-ள்.) துந்துமிக்கொடியை யுடையவள் சோணிதவூணனென்பவனை தலையறும்படி தண்டாயுதத்தாலடித்தாள் சக்கரத்தை கையிலேதரித்த அருணாசலையென்கிற சத்தி அக்கினிக்கண்ணனைக்கொன்றாள்—எ-று.

கயிடவன்புகைக் கண்ணனிருவருஞ்
செயிரின்மாளாச் சிந்தினன்சுந்தரி

மத்துனையோடுகூடிய அதசிமாம்போல்—எ-று. (௬௫)

வீழ்ந்தபின்பரி வேடமதாயெதிர்ப்
போந்தவன்கதை கொண்டுபுடைந்தனன்
சோர்ந்தவன்கதை யுமமவன்சென்னியு
மார்த்தகங்கொண் டறுததனணாணி.

(இ-ள்.) அப்படிவிழுந்துஇறந்துபோனவுடனே குதிரைமுகஅசு ரியெதிரேவந்துதண்டாயுதத்தினாலே அடித்தான் அடித்ததண்டாயு தத்தையும் அந்தஅசுரனுடையதலையையுமகத்தியினாலே அறுத்துத்தன் வினைதுர்க்கையும—எ-று. (௬௬)

அங்கதன்பி னழலுருவாயினன்
கங்கையாயினன் கரிருளாயினன்
பங்கயாசன னாயினன பங்கய
மங்கைநாயக னாயினன்மாயையாய்.

(இ-ள்.) அதன்பின்பு அசுரன் நெருப்புருபங்கொண்டுவந்தான் அ தன்பின்புசலப்பிரளயருபங்கொண்டும் அந்தகாரமாகியும்தாமரைப் புஷ் பத்திலிருக்கிறபிர்ம்மாவாயும் இலட்சுமிபுருஷராகியவிஷ்ணுவாகியும் எ திர்த்தான்மாயையினாலே—எ-று. (௬௭)

ஈதுகண்டவ ளென்செய்வன்மாயையால்
வாதுசெயதன னென்றுநளர்ந்துமை
பாதநெஞ்சினிற் பற்றினள்பற்றிய
போதிலோர்மொழி விண்ணிறபுகன்றதே.

(இ-ள்.) அப்படிஅசுரன பலபலருபங்கொண்டவுடனே பார்த்து மாயையினாலேதுன்பப்படுத்துகிறான்என்னவுபாயஞ் செய்தாலும்சாகி றதில்லைஇதற்கென்னசெய்வேனென்றுதுர்க்கையானவள் பார்வதிதே வியினுடையஇரண்டுபாதத்தையும்மனதிலேதியானித்தாள் அப்படிதி யானித்தவுடனே ஆகாயத்தினின்றும் அசரீரிஒருவாக்கியஞ் சொல்லிய து—எ-று. (௬௮)

மாயவேடங்க ளன்றிமகிடமே
மாயபோதி லவன்றலைத்தள்ளியே
தூயதாளின் மிதிக்கற்றொலைந்திடு
ந்தீயமாயையெனச்சொலத் தேறினள்.

(இ-ள்.) அநேகவிதமானமாயவேஷங்களல்லாமல்சுபாவமான எ ருமைமுகருபங்கொண்டபோதுயவன்தலையையறுத்துதகிமேதள்ளி உ னனுடையபரிசுத்தமாகிய காலினாலேமிதித்தால் தீமைபெருந்திய மா யைதொலைந்துபோமென்றுசொல்லத்துர்க்கையம்மன்தேறினள—எ-று

மட்டின்மாயை வடிவின்மலைந்தபின்
னெட்டிலைத்தலைச் சூலத்தினீக்கினள்
அட்டன்மேநிய தாய்ப்படைதொட்டனள்
வெட்டிவீழ்ததி யடியின்மிதித்தனள்.

(இ-ள்.) அளவில்லாத மாயருபங்கொண்டுவா செடுமைபொருந் திய அவனுடைய சூலத்தினாலேகுத்திக்கொன்றான் பின்பு அந்தத்த ஞ்டன் பழைய எருமைக்கடாமுகத்தை யுடையதனுசிஆயுதங்களைப்பி

ரயோகஞ்செய்த அளவில் அதகளைவிலக்கி வாளாயுதத்தால் தலையை வெட்டிததள்ளிக் காலினாலே மிதித்துக்கொன்றாள் துர்க்காதேவி எ-று.

ஒப்பிலாபபத மூன்றுமிதித்திடில்
தபபிமாயைய தவிாப்பதுபாரமோ
வட்பதத்தை நினைக்கினுமாணவஞ்
செப்புகாமிய மாயையுந்தீக்குமே.

(இ-ள்.) துர்க்கையம்மன் பாததலைநினைத்தாலும் அதை நினைததவருடைய ஆணவமாயை காமியமென்கிற மும்மலங்களையும் நீக்கிவிடும் அப்படிப்பட்ட ஒப்பில்லாதபாதம் பரிசமாகும்படி ஊறி மிதித்தால் பொய்யாகிய மாயைமாததிரந் தவிர்ப்பதுபெரிதோ—எ-று. (சக)

போதவானவர் பூமழைபெயதனர்
மேதிமாமுகன் மெய்க்கதியுற்றனன்
தீதிலாவவன் செங்களந்தன்னிலோர்
சோதிலிங்கமிருந்ததுதோன்றவே.

(இ-ள்.) தேவர்கள்மிகவும் புஷ்பவருஷம்பொழிந்தார்கள் மகிடாசுரனும் அம்மன்கையினாலிறந்ததினாலே மெய்மையானமோட்சதலைச் சேர்ந்தான் யாதொருகுற்றமுமிலலாத அவனதுசிவப்பாகிய கண்டத்திலே ஒருபடிகலிங்கமிருந்தது—எ-று. (சஉ)

கண்டமட்டிலக் காக்கொளக்காகவ
கண்டமட்டிற் புறந்தகடாமகன்
கண்டமட்டிலிருந்தகடவுளைத்
கண்டமட்டியெடுத்தனள்கன்னியே

(இ-ள்) நவகண்டமட்டும் ஆண்டமகிடாசுரனுடையகழுத்தைச்செக்காகவைத்துத் துர்க்காதேவி அறுக்கஅந்தக்கழுததி லிருந்தபடிகலிங்கத்தை கண்டபோதே கையினாலெடுத்தாள்—எ-று. (சங)

கொண்டுசென்றுமை கோகநகப்பதங்
கண்டுபோற்றிகடவுளையியந்தனள்
வண்டுவார்குழல் வாங்கினள்செங்கையை
அண்டர்நாயகன் விண்டலஞ்கையால்.

(இ-ள்.) அப்படிப்பட்டபடிகலிங்கத்தையெடுத்துக்கொண்டுபோய் உமாதேவியினதுபாதங்களைதொழுதுநடந்தகாரியமெல்லாம்சொலலி.த்சுவாமியைக்கொடுத்தாள வண்டுகளசூழ்ந்திருக்கின்ற கூந்தலையுடையபார்வதியம்மன் கையினாலேவாங்கினளதேவர்களுக்கெல்லாம்நாதராகவிருக்கின்றசுவாமியும் அம்மன்கைமேல் வைத்திருக்கிற ஆசையினாலே கைசயைவிடாமற கெட்டியாகஇருந்தார்—எ-று. (சச)

தாயுமந்தது கண்டுமகிழ்ந்திறை
ஞயவென்காம பற்றியசதனை
வாயையங்கை புதைத்துமகபதிக்
காயிரக்கண் ணளிததவன்கூறுவான்.

(இ-ள்)பார்வதியாளவள் அந்த ஆச்சரியத்தைப்பார்த்து மகிழ்ச்சியடைந்துசுவாமி பானபர்என்கையைவிடாமலிருந்தது ஏதனாலேயென்

மன்னதனுமவனையிவன்காத்தி லிங்கத்துடன்விழுங்கி மகிழ்ந்துபோனான்,பின்னகனுலவன்மிடற்றிறசிவனுருவமிந்ததந்தப்பெருமையாலே, யுன்னதமாயினஞ்சிவனுமூறுததறித்தவுடனுமிறைபருவமென்றே,வன்னதனுல்வினையடைந்ததது தவுருநவதீர்த்தமாடிலென்றான்.

(இ-ள்) எதிர்ப்பட்ட அந்தமன்னதனென்கிறரிஷியைக் கையிலிருந்த இலிங்கத்தோடே இந்தமகிடாசூரனெடுத்துவிழுங்கிவிட்டுப்போனான் பின்பு அவனைகண்டத்திற்சிக்கிக்கொண்டு படிகலிங்கமிருந்தபடியினாலே யிருந்தபெருமையடைந்தான் அந்தஇலிங்கமிருந்தகண்டத்தையுடையவனும் சிவசொரூபமன்றோ அவனைக்கொன்றபடியினாலே பாவஞ்சம்பவித்தது நவதீர்த்தங்களாடினால் அந்தபாவம்போகுமென்றார் கௌதமர்

அன்புமுனியுரைத்தளவிலொருமொழியங்காத்திலெழுந்தரியதீர்த்த மொனபதுமவ்விடந்தலவருமவை வருமாறியற்று மெனவுமையும்விரைச,தன்பதும முகநோக்கி யுனதுகைவாளிரந்துகங்கைதருவாயென்றாள, வன்பணிலமெடுத்தநாளூ தொழுதுகைவாணிலத்தெறிந்துவாங்கும்போதில்.

(இ-ள்) மிகவும்பத்தியையுடையகௌதமர் இந்தப்பிரகாரஞ்சொன்ன அளவில் பாவந்தீர ஆடுதற்கு ஒன்பதுதீர்த்தமுமிவ்விடத்தில் வருமபடிச்செய்யென்று ஆகாயத்திலிருந்து ஓருவார்த்தைபிறந்தது அதைக்கேட்டபார்வதியும் தாமரையினதுமலர்போன்ற முகத்தைப்பார்த்து உன்னுடையகையிலிருக்கிறவாளினாலே பூமியைபிளந்து கங்கைவரும்படிசெயயென்று சொல்ல ஐயசக்கையிற்றரித்த தாக்கையும்வண்டிவாளாயுதத்தால்பூமியிலேவீசியெடுத்தபோது-எ-று. (௬௰)

கலநதியுமபிறவுளாநனைதிகளுமச சொகந்தீரநல்லதான
சுவையதிகழுதவுபலதடாகங்களுமாக கெழுந்தவந்தசசுனையினூடே
பவமகலவொருமாதமுழுகியிருந்தாள் கரதனைப்பறறிநீங்காச் [று
சிவவடிவுமகன்றதுதன்னுளமகிழ்ந்து க்கரையில்வந்தாடேவர்போற்

(இ-ள்) ஒன்பதுதீர்த்தங்களும்மற்றுமுள்ளநதிகளும் விடாயாறும்படிஉதவிசெய்யும் கலசருசியைக்கொடுக்கின்ற அனேகம்தடாகம்உண்டானதுகள் அந்தநதிகளில் ஒருமாதவரைக்கும் அம்மன்குற்றம் நீங்கும்படி ஸ்நானஞ்செய்துக்கொண்டிருந்தாள கையைப்பற்றிக்கொண்டு விடாமலிருந்த லிங்கமுமநீங்கியது அப்போதுதேவர்களபோற்றும்படி மனதுசந்தோஷித்து அம்மனக்கரையில்வாநதுசேர்ந்தாள்-எ-று. (௬௧)

அருவருவாமொருசிவனையதன்கரைமேறபுறத்திருத்தியருச்சித்தாணம் இருவினையுந்தவிர்ப்பானுக்கென்பாவநாசத்தானென்றியற்பேரிட்டாள் திருமருவும்பெருஞ்சுனைக்கு மினியகட்கதீர்த்தமெனத்திரிப்பேரிட்டாள், குருமணியையருணகிரிப்பெருமானைத்தொழக்கனகக்கோயில் சார்ந்தாள்.

(இ-ள்) அருவமாகியும்உருவமாகியும்விளங்குகின்றஒப்பற்றசிவனை அந்தநதிக்கரையிலேஎழுந்தருளச்செய்து அர்ச்சனைசெய்தாள்நம்முடை

[illegible] இரண்டை[illegible] பாவந்தீர்த்
தரனென்றுபேரைத்தரித்து அழகுபொருந்திய அந்தச்சுனைக்குக் கட்க
தீர்த்தமென்றுபெயரிட்டாள் நிறம்பொருந்தியமணியொத்தவளை அரு
ணைநகரத்திலெழுந்தருளியிருக்கின்றபரமசிவனை வணங்கும்படியாகப்பொன்
னிறமாகியகோவிலுக்குப்போனாள்-எ-று. (௫௨)

முருகுமலரயன்றடத்திற்படிந்துவெண்ணீறணிந்துசெங்கைமுடியிற்
கூப்பி, யருகுவருங்கோதமன்சொற்படிதொழுதுட்புகுந்துகணநாதமு
னைநகக்கண்ணுற், றுருகிநிலமுறவிழுந்துபணிந்தெழுந்துபரவசமாயப்பா
டியாடி, பருகியுவந்தெழுதுயர்த்து வலமபுரிந்து தனதுகுறையுரைத்துப்
போற்றி.

(இ-ள்) வாசனைபொருந்தியதாமரைமலரிலிருக்கிறபிரமாவினுடைய தீர்த்தத்தில்முழுகிவிபூதிதரித்துச்சிவந்தகைகளைசசிரசில்வைத்துக்கும்பிட்டுத்தன்னருகேவருகிறகௌதமர்சொன்னபிரகாரம உள்ளேபோய்க்குளிர்ச்சிபொருந்தநமஸ்காரஞ்செய்து எழுந்திருந்துபரவசமாகிப்பாடியாடிஉருக்கமடைந்துகளித்துஆனந்தக்கண்ணீர்பெருகிப்பெருமூச்செறிந்துவலமாகவந்துதன்னுடையகுறையைசசொல்லிவணங்கினாள்-எ-று

கார்த்திகைத்திங்களிற்றிருநாளாக மற்றின்படிநடத்திக்கனற்கண்ணானை
தோத்திரம்பண்ணுதலுமொருசுடர்மலைமே லெழுந்தச்சுடரினூடே [த
லைதெரியபலகோடியிரவியெனவொருசேதி யெழுந்துமின்னே
வாய்த்தமலைவலமாகநடத்தியெனவுரைத்துடனே மறைந்ததன்றே.

(இ-ள்) கார்த்திகைமாசத்தில் ஆகமப்பிரகாரந்திருநாள்செய்துநெருப்புக்கண்களையுடைய சிவனைப்பணிந்தவளவில் மலைமேலொருபிரகாசமுண்டாகி அதிலேசொல்லுதற்கரிய பலகோடி சூரியப்பிரகாசமாயசுவாமியெழுந்துபெண்ணேஇந்தமலையைவலமாகநடந்துவாவெனறுசொல்லிமறைந்துவிட்டார்-எ-று. (௫௪)

நாரிதனைச்சிலையாக்குமுனிவனுமப் படிவலமாநடத்தியென்றான்
வாரியெனமறைபுகழக் காரிகையுநடந்தண்டன்மலர்க்கைகூப்பி
பேரிகையுங்காகளமுஞ் சல்லரியும்மல்லரியும்பெரியவாணி
றாயமுகந்துந்துமியுமத்தளமுங் குடமுழவுந்துவைத்தவன்றே.

(இ-ள்) அகலிகையாகியபெண்ணைக்கல்லாக்கியகௌதமரிஷியும் அம்மா அப்படியே வலமாகப்போவென்றுசொல்லச் சமுத்திரம்போல்வேதகோஷமுழங்கவும் ஆகாயத்தில்பேரிகை காகளம் சல்லரி மல்லரி முசு துந்துமி மத்தளம் குடமுழா முதலானவாத்தியங்கள் முழங்கவும்பார்வதிஇரண்டுகையுங்கூப்பிக்கொண்டுநடந்தாள்-எ-று. (௫௫)

அரம்பையுருப்பசிமுதலாமகபதிநாட்டரிவையர்க ளாடல்காட்டக்
குரும்பையெனநெருங்குமுலை வரையரமங்கையர்மலரின்குப்பைகொட்
டரும்புகளித்தனையமொழிப்புனலரமங்கையரிருட்டுங்கவரியாட்ட [டக்
விரும்பியுருகநைபுரியு மரவமின்னார்மணிவிளக்க மெடுத்துநீட்ட.

கலித்துறை.

பானுகம்பன்கனச் சங்கொலிநெடியமால்பணிலத்
தானகம்பலை நாரதர்வீணையினரவம்
வானதுந்துமி கம்மலைதிசையெலாமறைத்த
தேனிறைந்திடு மலர்மழையிமையவர்சிதற.

(இ-ள்) பானுகம்பனென்பவன் தன்னுடைய ஆயிரங்கைகளிலுஞ் சங்கத்தை வைத்தூதுகிறவொலியும் விஷ்ணுவானவர் தமது சங்கத்தை வாயில்வைத்தூதுகிற சத்தமும்நாரதர் வீணையைவாசிக்கிறசத்தமும ஆகாயதுந்துமியினுடைய சத்தமும் திக்குகளெல்லாஞ்செவிடுபடச்செய்தது கள் தேனிறைந்தபலநுஷ்பங்களைதேவர்களசொரிய.-எ-று (௯௦)

இது முதல்மூன்றுபாடல்களுக்குளகம்.

கற்றைவார்சடை யிளம்பிறைநெடுநிலாக்கமழப்
பற்றராமணி யிளவெயில்விரித்திடப்புவியைப்
பெற்றமாதினுக் கொருபுறமளித்திடப்பிடித்த
வெற்றநூலெனப் புரிபூணுண்மார்பகத்திலங்க.

(இ-ள்) கற்றையாகியநீண்டசடையில்தரிக்கப்பட்ட இளமையாகிய பிறையினதுநெடுமைபொருந்தியசந்திரிகைபிரகாசிக்கவும் ஆபரணமாகிய புற்றிலிருக்கின்றசர்ப்பத்தின்தலையிலிருக்கிறமணிகாந்தியை விரிக்கவும உலகமாதாவாகியபார்வதிக்குப்பாதிசரீரத்தைக்கொடுக்கிறதற்காகப் பிடித்தவளவுநூல்போலபுரியாகியபூணுலானது மார்பிற்பிரகாசிக்கவும.

பிறப்பிலாமதன்மறைகளாலளவிடாபபெரியோ
னிறப்பிலாவிடையிறையின்மேலினிதெழுந்தருள
வறத்தினுயகியடிபணிந்திறைஞ்சினளனைத்துக்
துறைக்குமண்ணலுமவளுடனினையவைசொலலுறும்.

(இ-ள்) பிறப்பில்லாதமூர்த்தி அநேகவேதங்களாலும அறியப்படாதவர் இறப்பில்லாதபரமசிவன் ரிஷபவாகனத்திலெழுந்தருளத் தருமவளர்க்கின்றபார்வதி அந்தச்சுவாமியாதத்தைத்தொழுதுவணங்கினாள எலலாவற்றையும்நீக்கியகடவுளானவர் அந்தஅம்மனோடு சொலவா.-எ-று.

பெண்ணுமாணுமா யுலகுயிர்பபொருளெலாம்பிரிந்தோ
மண்ணுதாகிய பீடமுமிலிங்கமுமானோ
மெண்ணுநீயென நாமெனவிரண்டிலேமரும
முண்ணலாவிய வயிரமுநிகர்த்துடனுறைவோம்.

(இ-ள்) வாராயுமையேநீயும்நானும்பெண்ணுமாணுமாகிஉலகத்தில் அனேகஞ்சீவராசிகளைவேறுவேறுஉண்டாக்கினோம்சமீபமாய் ஆவிடையாரும்லிங்கமானோம்நீயென்றும்நானென்றும்வேறுபேதமில்லைமரமும அதற்குளேயிருக்கிறவயிரமும்போலொன்றாயசேர்ந்திருப்போம் (௯௧)

அங்கம்பாவுநம்பொருட்டிவிட்டிமயவெற்படைந்தா
யிங்குநாமுனக்கொருபுறமளிப்பதேயியற்கை
மங்கையேயெனவிடப்புறத்துறைதரமகிழ்வுற்
றங்கையாலணைத்தருளினனுருகியொன்றானார்.

(இ-ள்) தேகத்தைவிட்டுநம்பொருட்டாக இமயபர்வதத்திலேவந்து பிறந்தாய் அவ்விடத்தில்நாமுமக்கொருபாகங்கொடுப்பதுசுபாவமே பெண்ணே நம்முடையஇடப்பாகத்திலேசேர்ந்திருவென்று சந்தோஷத்தை யடைந்துகையினாலேஅணைத்துக்கொண்டார் இரண்டுதேகமும் உருகி ஒருதேகமானார்கள் அம்மனுமசுவாமியும்-எ-று. (௯௪)

அடுத்தசெஞ்சடையொருபுறமொருபுறமளகந்
தொடுத்தகொன்றையோர்புறமொருபுறமலர்க்குவளை
வடித்தசூலமோர்புறமொருபுறமலர்க்கருவளை
திடத்திலாகழலொருபுறமொருபுறஞ்சிலம்பு.

(இ-ம்) அப்படியிருவரும்உருகிச்சுவாமியினுடையபாதியும் அம்மனுடையபாதியும் ஒருதேகமானபோது ஒருபக்கத்திற்சிவந்தசடையும்ஒருபக்கம்கூந்தலும்ஒருபக்கம்கொன்றைமாலையும்ஒருபக்கம் புஷ்பமாலையும்ஒருபக்கஞ்சூலமும் ஒருபக்கம்நீலோற்பலபுஷ்பமும் ஒருபக்கம்வீரகண்டாமணியும்ஒருபக்கஞ்சிலம்பும்தோன்றியதுகள்-எ-று. (௯௫)

பச்சைவன்னமற்றொருபுறமொருபுறப்பவளங்
கச்சுலாமுலையொருபுறமொருபுறமகவின்மா
ரச்சநீக்கியவரமுமொன்றபயமொன்றங்கை
இச்சையாமிவறுறுதல்கண்டிறைஞ்சினரிமையோர்.

(இ-எ) ஒருபுறம்பச்சைநிறமும்ஒருபுறம்பவளநிறமும்ஒருபுறம்இரவிக்கையணிந்தஸ்தனமும்ஒருபுறம்அழகுபொருந்தியமார்பும் ஒருபுறம் அபயமும் ஒருபுறம்வரமுமாகியஆசையோடுஇருவரும்பொருந்துதலைப் பார்த்துதேவருமவணங்கினார்கள்-எ-று. (௯௬)

இந்தமாக்கதைபடித்தவர்செவிகளிற்கேட்டோ
ரந்தணுசலமுனியிசைதமிழ்க்கடல்கடப்பா
மைந்தரோமுதற்கிளையுடனுலகினில்வாழ்வார்
பந்தபாசமறறழிவிலாப்பரகதிபெறுவார்.

(இ-ள்) இந்தக்கதையைப்படித்தவர்களும் காதிலேகேட்டவர்களும் சந்தனவிருக்ஷங்கள்சூழ்ந்தபொதியமலையிலிருக்கிற அகஸ்தியரைப்போல தமிழ்க்கடல்கடப்பார்கள் சந்தானபாக்கியத்தோடுஞ்சுற்றத்தாரோடும் உலகத்தில்வாழ்வார்கள் தங்களைபந்தமாகச்சூழ்ந்துகொண்டிருக்கிறவினைகளைத்தள்ளிமோட்சம்பெறுவார்கள்-எ-று.

முனிவனேயெனப்பயந்தவனுரைத்திம்முறையென்
றனையமாமுனிக்குரைத்தலுமவனெழுந்திறைஞ்சிக
கனகசைச்சிராங்கதனுயர்கதிபெறுங்கதையை
வினவினன்முனிவனுமகிழ்ந்திவைவிளம்பும்.

